*Kumaraṉ*

*Āram 3, muttu 31*

*March 17, 1926*

Record no. 313

Registered No· M· 1823·

உ
சிவமயம்.

"KUMARAN" Karaikudi·




"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.

"ஆலயந் தொழுவது சாலவு நன்று."    "திரைகட லோடியுந் திரவியந் தேடு."

ஆரம். ௩. } காரைக்குடி, குரோதனஹு பங்குனிமீ ௪௳ (17-3-26) { முத்து. ௩௧

## உண்மையும் அருளும்.

கடவுளையே 'உண்மைப் பொருள்' என்று ஆதிமறைகள் அழைக்கின்றன. உண்மையே அழகு: அழகே உண்மை என்ற கொள்கையினை, கம்பர் ஆதரிக்கின்றார். உண்மைப் பொருளான உன்கடவுள் எங்குளன்? என்று கனகன் (இரணியன்) வினவினான். உண்மையொளி எங்கணும் வீசுகின்றது; முக்கியமாக உண்மையெனும் கொழுஞ்சுடர் மக்கள் அகத்தே சுடர்கின்றது. இதுவே, ஆண்டில் இளைஞனும் அறிவிலே முற்ற முத்து முதிர்ந்தவனுமான பிரகலாதன் இறுத்த விடையாகும். ஒவ்வொருவனும் இயற்கையகத்தும் மக்கள் அகத்தும் மறைந்தொளிரும் மகாசக்தியாகிய உண்மைப் பொருளையே சரணமாக அடைந்து வாழ்தல்வேண்டும். அப்போது, 'அரண் உனக்கு ஆவேன்! அஞ்சல்!' என்று உண்மைத் தெய்வம் உறுதி கூறி நம்மைத் தாங்கிக் காக்க விரைகின்றது.

***

உள்ளத்தின் தன்மையே உண்மை. உள்ளொளியே உண்மை யொளியாகிய இறையொளி யாகும். இவ்வுண்மை யொளி அகமும் புறமும் நிறைந்து ததும்பிட வாழ்க்கையைச் செந்நெறிப் படுத்துவதே உண்மைநெறி;—உண்மை வாழ்க்கை. அகவாழ்விற்கும் புறவாழ்விற்கும் ஒருங்கே உண்மை இன்றியமையாதது. புறவாழ்வில் வெளிப்படும் உண்மையே 'மெய்ம்மை' (=மெய்யின் தன்மை)யாகின்றது. 'உள்ளின் (மனத்தின்) தன்மை'யினை உண்மையென்றும், 'மெய்யின் (உடம்பின்) தன்மை'யினை மெய்ம்மை யென்றும் கூறிய செந்தமிழ்ப் பெரியோர் 'வாயின் தன்மை'யினை வாய்மை யென்று கூறிப் போந்தார். இங்ஙனம் மனமெய் மொழி யாவும் உண்மை மயமாக ஒளிர வேண்டுமென்பது பண்டைத் தமிழ் மதம். உண்மையே மெய்ம்மை யென்றும் அழைக்கப் பெறுதலால், உள்ளமும் தோற்றமும் ஒன்றுபட்டு வாழவேண்டுமென்பதே தமிழோடு பிறந்த திருநெறி யென்பது தெளிவாகின்றது. உள்ளத்தில் உண்மையாக ஒளிர்ந்து, செயலில் மெய்ம்மையாக விளைவதே, வாயினின்றும் வாய்மையாக வெளிப்படுகின்றது. புறத்தூய்மை நீரால் அமைவது போலவே அகத்தூய்மை வாய்மையால் அமையும் என்பது மேலோர் அனுபவ வாயிலாகக் கண்ட காட்சி. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவது எத்தகைய நன்னோக்கத்தோடு நடைபெறுவதாயினும், அது மனத்தூய்மையைக் கெடுத்து மனமாசினைப் பெருக்குவதாகலின், ஒருபோதும் நன்மை தருவதில்லை.

***

உள்ளும் புறமும் ஒத்து வாழ்வதே வாழ்வு. மனமெய் மொழிகளில் உண்மையோடு ஒன்றுபட்டு வாழ்வதே உண்மை வாழ்வு. இத்தகைய வாழ்விலேதான், மனமாசு மாறுகின்றது; மனத்தூய்மை பிறக்கின்றது. மனத் தூய்மையினையே 'மனச் செம்மை' யென்றும் கம்பர் பெருமான் கூறியுள்ளார். இத்தகைய உண்மை யுள்ளமே அழகு நிறைந்த உள்ளமாகும். ஆனந்த மயமான காலை வேளையில் இருளைக் கீறி யெழும் இளஞ் சூரியனைப்போல, செம்மை சான்ற உள்ளத்தில் உதயமாகி யொளிரும் உண்மை யொளியே உலகின்கண் செறிந்து கிடக்கும் அறியாமை யிருளை அழிக்க வல்லதாகும்.

***

மனச் செம்மையே பண்பட்ட தண்ணிலமாகும். இத்தகைய மனத்தினையே நமது அப்பர் சுவாமிகளும் "மெய்ம்மையாம் உழவைச் செய்து" பண்படுத்தப் பெற்ற பக்குவ பூமி யென்று குறித்துச் செல்கின்றார். இத்தகைய 'உண்மை-நில'த்திலேதான், கருணைவித்து விழுந்து வேரூன்றுதல் கூடும்! இங்ஙனம் வேரூன்றிப் படரும் அருளே அகமும் புறமும் போர்த்து நல்லறமாக விளைகின்றது. அறத்தின் வேர் அருள்; அருள் விளையும் நிலமே உண்மை. இது கம்பர் கொள்கை.

***

"அருளொழுக்கமே மேலான ஒழுக்கமென்று முறையிடும் மறைகள், உண்மையினும் உயர்ந்த மதமே யில்லையென உறுதி கூறுகின்றன. இதுவே பண்டைத் தமிழர் கொள்கைய மாகும். இயற்கையோடிசைந்த இன்பவாழ்வு வாழ்ந்த தமிழ்ப் பெருமக்கள் இயற்கையாகவே உண்மை—மெய்ம்மை — வாய்மையோடிசைந்த உயர்தர வாழ்வு வாழ்ந்தனர் என்பதில் ஐயமில்லை. பிற்காலத்திலேதான் உண்மையிலும் அருளொழுக்கமே மேலானதென்ற கொள்கை, வைசன பௌத்தரிடையே தோன்றித் திகழ்ந்தது. இக் கொள்கையினையே தெய்வப் புலமைத் திருவள்ளுவரும் ஆதரிக்கின்றார்.

***

உண்மை பேசு; முழுஉண்மையும் பேசு; உண்மை தவிர ஒன்றும் பேசாதே—என்று ஏசுபெருமான் கட்டளை யிடுகின்றார். இதுவே பண்டை ஆரியர் தமிழர் கொள்கையு மாகும். 'தீமையிலாத' சொல்வதே வாய்மை யென்றும், குற்றமற்ற நன்மை பயக்குமெனின் பொய்மையும் வாய்மையிடத்ததாமென்றும் கூறும் திருவள்ளுவ நாயனார் கொள்கை வேறு; ஏசுநாதர் கொள்கை வேறு. இவ்விரு பெருந் தொள்கைகளிலும், வள்ளுவர் கொள்கை தள்ளத்தக்க தென்றும் கிறிஸ்துவின் கொள்கையே கொள்ளத்தக்க தென்றும் 'இரட்சணிய யாத்திரிகம்' எனும் செந்தமிழ் நூலியற்றிய ஆசிரியர் கிருஷ்ண பிள்ளை யென்பார் வற்புறுத்தியுள்ளார். எனினும் தமிழ் நாட்டிலே திருவள்ளுவ

காலம் முதல் அவரது கொள்கையே வேரூன்றிப் படர்ந்து வருகின்றதென்னலாம்.

* * *

பதியிழந்தனம்! பாலனை இழந்தனம்! [படைத்த
நிதியிழந்தனம்! இனிநமக்கு உளதென [நினைக்கும்
கதியிழக்கினும் கட்டுரை இழக்கிலேம் [என்றுன்
மதியிழந்து தன்வாய் இழந்து அருந் [தவன் மறைந்தான்.

என்ற வண்ணம் மாமுனியாகிய விசுவாமித்திரனும் மதியிழந்து வாயிழந்து மறையும்படி உண்மை நெறியிலேயே உறுதியாக நின்ற அரிச்சந்திரன் கொள்கை வள்ளுவர் கொள்கையன்று—கிறிஸ்துவின் கொள்கையே யாகும். செந்தனிக்கோல் செலுத்திய அரிச்சந்திர மன்னன் பதியும் நிதியுமிழந்தகால் எத்தனை மக்கள் துன்பக் கடலுள் ஆழ்ந்தனர்! பேரரசும் பெருஞ் செல்வமும் துறந்த பெருமன்னன், நாட்டின் 'எதிர்கால' அரசனாகிய 'பாலனை'யும் இழந்தான். காவலர் இருவரையும் ஒருங்கே இழந்த மக்கள் மரணத் துன்பமுற்றன ரன்றோ? தீமை கலவாத நன்மை பயக்கும் பொய்மையும் வாய்மை யிடத்ததெனின், அரிச்சந்திரன் அத்தகைய ஒரு பொய்மை கூறி நல்லரசின்றி வருந்திய நாட்டு மக்களுக்கெல்லாம் 'புரைதீர்ந்த நன்மை' விளைத்திருக்கலா மன்றோ? அரிச்சந்திரன் அவ்வாறு செய்யவில்லை யென்று புராணம் கூறுகின்றது. அரிச்சந்திரன் கதை பிறந்து நம்மக்கள் மனத்தைக் கொள்ளை கொண்ட காலத்தில், திருவள்ளுவர் கொள்கை நமது நாட்டில் இல்லையென்றாவது, இருந்திருப்பினும் நம்மக்கள் உளத்தை அது கவர்ந்து கொள்ளவில்லை யென்றாவது கொள்வதே முறையாகும்.

* * *

இராமனது கொள்கையும் அரிச்சந்திரன் கொள்கைபோன்றதாகும்.

முடியாமுடி மன்னன் முடிந்திடவும்,
படியேழும் கெடுந்துயர் பாவிடவும்,
மடியா நெறிவந்து வனம்புகுதும்
கொடியான் வருமென்று குலாவுவதோ?

என்று சீதைபிரலாபிக்கின்றாள். தசரத மன்னனது முடியாத முடியாட்சியும் முடிவுற்றது! உலகமெலாம் நெடுந்துயரில் மூழ்கிக்கரைகாணாது கதறியது. இந்த நிலையிலும் இராமன் உண்மை நெறியிலேயே வந்து வனம் புகுந்தான். இத்தகைய 'கொடியான்' (அருளில்லாதவன்) எனக்காக இரங்கி வருவதுமுண்டோ?—என்று சீதை தனக்குள்தானே மொழிகின்றாள். எனினும் இத்தகைய 'கொடிய' உண்மையினை யன்றோ, இராமன் கைக்கொள்கின்றான்! அறத்தினும் கொடிய தொன்றில்லை எனக் கூறும் சந்தர்ப்பமும் வாழ்க்கையில் எதிர்ப்படுவ துண்டு என்பது கம்பர் கொள்கை. (பி. ஸ்ரீ.)

## ஹிந்து மதத்தின் நிலை.

'மாடர்ன் ரிவியூ'வில் வெளியானதை 'சமரஸபோதினி' வெளியிட்டிருக்கிறது. அது வருமாறு:—

முற்காலத்தில்புண்ணியபூமியென்று புகழப்பட்ட ஆரியாவர்த்தம் இப்போது பாப பூமியாகிவிட்டது. தெய்விக நாடென்று புகழப்பெற்றது இப்போது தீமைகளுக்கு உறைவிடமாகிவிட்டது. நம்மைப் பெருமைப் படுத்திய தேசீய குணங்களை இழந்துவிட்டோம். நாம் குருடர்களாகிவிட்டோம். நமது அற்பத்தனமான தற்கால வாழ்வால் முற்காலப் பெருமையைக் கொள்ளை யடிக்கிறோம். நாம் இழிந்த சாதியாராகிவிட்டோம். அன்னியரைக் காக்காய் பிடித்துப் புகழ்வதும், சோம்பலும், பணப் பேராசையும், மேல்நாட்டாரைப் போல் பாவனை செய்வதும் நமது குணமாகிவிட்டன. நமது கொடிய செயல்களுக்காக வேதத்தை ஆதாரமாகக் காட்டுகிறோம். இந்து மதம் பாபக்காடாகிவிட்டது. சுதந்தரம் இழந்தது நமது பாபத்திற்குத் தண்டனையே. இந்து சமயத்தலைவர்கள் இன்று யாவர் தங்கள் நம்பிக்கைப்படி நடக்கத் துணிவில்லாப் பேதைகளே. அவர்கள் உரக்கப் பேசுவார்கள். தீண்டாமையைப்பற்றி ஏசுவார்கள். ஆனால் தீண்டாதார் கொடுத்த தண்ணீரைக் குடிக்கக் கூசுவார்கள். தேசத்திற்காகச் சிறைபுகுந்தவர்களைப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வற்புறுத்துவார்கள். நமது கோயில்கள் காமசாலைகளாகிவிட்டன. அதற்குள் தீண்டாதார் நுழையக்கூடாதாம். ஆனால் தாசிகள் கூத்தாடலாமாம். கடவுளைத் திருப்திசெய்ய தாசிகள் வேண்டுமாம். தாசிகளில்லாமல் திருப்தி யடையாத கடவுளொன்று இருப்பது விநோதமே யாகும்! பஞ்சமன் நுழைந்தால் தீண்டலாகும் என்னுங் கடவுளும் விநோதமே. இந்தியப் புருஷன் எத்தனை மனைவியரைவேண்டுமெனினும் மணக்கலாம், வைப்பு வைத்துக்கொள்ளலாம், கிழவன் இளம் பெண் சாதியை மணந்து அவளை அநாதை இளங்கைம்பெண்ணாய் விட்டுப்போகலாம். அந்த இளங் கைம்பெண்கள் மாத்திரம் புனர் விவாகம்செய்துகொள்ளக்கூடாதாம். இத்தகைய நிர்ப்பந்தத்தால் பல கைம்பெண்கள் கற்பழிகின்றனர். புரோகிதரும் மூடக் கொள்கைகளும் அடர்ந்த இந்துமதம் சாகட்டும்! ஆரிய மதமும், வேதாந்தமும், வேதமும் வாழட்டும்!

## காந்திஜீயின் தற்சரிதம்.

### புத்தகமாய் வெளியிட அனுமதி யில்லை.

(காந்திஜீ 'யங் இந்தியா'வில் எழுதுவதாவது.)

அநேக நண்பர்களும் பிறரும் 'உண்மையில் எனது பரீக்ஷைகள்' என்று நான் எழுதிவரும் அதிகாரங்களைப் புத்தக ரூபமாய் வெளியிட அனுமதி தருமாறு தந்தி மூலமும் கடித மூலமும் கேட்டுக்கொண்டிருக்கின்றனர். பத்திராசிரியர்கள் தங்கள் பத்திரிகைகளில் நான் எழுதிவரும் அதிகாரங்களை அவ்வப்பொழுது தங்கள் பத்திரிகைகளில் வெளியிடுவதைப்பற்றி எனக்கு ஆக்ஷேபனை யில்லை. ஆனால் இந்த நிலைமையில் புஸ்தக ரூபமாய் அவற்றை வெளியிட அனுமதிக்க எனக்கு உத்தேசமில்லை. எப்பொழுது இச் சரித்திரம் முடியுமென்று எனக்கே இப்பொழுது தெரியாது. இவ்வதிகாரங்களைப் பூர்ணமாய் வெளியிடாமல் பாகங்களாயாவது எனது மேற்பார்வையின் கீழ் இவ்வதிகாரங்களைப் புதிப்பிக்காமலாவது வெளியிட எனக்கு இஷ்டமில்லை.

ஆகையால் இப்பொழுது இந்த அதிகாரங்களை அப்படியேயாவது மொழிபெயர்த்தாவது புஸ்தக ரூபமாய் வெளியிட அனுமதிக்க நான் தயாராயில்லை யென்பதை பிரசுரகர்த்தர்கள் அன்போடு குறித்துக்கொள்வார்களாக.

## வேப்பிலையின் பெருமை.

சென்னை சிலாசாசன இலாகா ஸ்ரீமான் பி. வி. ஜெகதீசய்யர் எழுதுகிறார்:—"நாம் கிராமாந்தரங்களில் வீடுகளில் பிரசவம் ஆனதும் வேப்பிலைக் கொத்துகளை வாசலில் கூரையின் மீது தொங்கவிடுவதைப் பார்க்கிறோம். இதேமாதிரி வைசூரி கண்ட வீடுகளிலும் ஏராளமான வேப்பிலைக் கொத்துகளை வாசலில் வைப்பதைப் பார்க்கிறோம். பிசாசு ஓட்டுவதற்காகவும் தேசத்தில் விஷ ஜந்துக்களின் கடியால் நேரிட்ட விஷத்தை நீக்கவும் வேப்பிலையை உபயோகப் படுத்துகிறார்கள். இந்த அப்பியாசம் பண்டைக்காலம் தொடங்கி நமது நாட்டில் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இதில் குணமில்லாவிட்டால் இம்மாதிரி செய்வார்களா? ஆகையால் ஏதோ இந்த இலையினிடத்தில் நல்ல குண மிருக்கிறதென்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். தற்கால ஆயுர்வேத வைத்தியர்கள் சில நீடித்த சுரம் நீங்க வியாதியஸ்தர்களுக்கு முற்றின வேப்பமரத்தின் பட்டையைக் கொண்டு கஷாயம் செய்து கொடுக்கிறார்கள். வயிற்றில் பூச்சி முதலிய கிருமிகள் நீங்க வேப்பம் கனியை உட்கொள்ளச் செய்கிறார். ஒரு ஸ்திரீ பிரசவித்ததும் அவளுடைய தேகம் மெலிவடைந்திருப்பது பற்றிச் சுலபமாய் இதர தொத்து வியாதிகளுக்கு இடங்கொடுக்கக் கூடும். இதை அப்பொழுதே நிவர்த்திக்காவிட்டால் அவள் அறையில் அவ்விதமான பல ஜனங்கள் நடமாடி அந்தப் பிரசவித்த வீட்டில் வருவதிலிருந்து வியாதியை அடையக்கூடும். இது காரணம்பற்றியே வேப்பிலையை ஏராளமாய்ப் பிரசவித்த அறையின் வாசலிலும் உள்ளும் வைக்கிறார்கள். இதற்கு நேர் விரோதமாகப் புளிய இலையின் காற்று உடம்பிற்குக் கெடுதலைச் செய்கிறதாம். இது சம்பந்தமாய் ஒரு கதை உண்டு. ஒரு ஸ்திரீயின் கணவன் அவளைப்

(௧௧-ம் பக்கம் பார்க்க.)



## சரித்திரப்பகுதி

## மகாத்மாவின் உண்மை வாழ்வு.

### சுத்த போசனமே சுகபோசனமெனக் கண்டது.

அதிகாரம் ௧௪.

(காந்தியடிகள் 'நவஜீவனி'ல் எழுதிவரும் தற்சரிதை.)

டாக்டர் மேத்தா திங்கட்கிழமை யன்று, என்னைச் சந்திக்கும் எண்ணத்தோடு விக்டோரியா ஹோட்டலுக்குச் சென்றார். நாங்கள் அவ்விடத்தைக் 'காலி' செய்துவிட்டதாகக் கண்டதும், எங்கள் புதிய விலாசம் தெரிந்து எங்கள் (புதிய) 'ஜாகை'யில் என்னைச் சந்தித்தார். கப்பலி லிருக்கும்போது எனது அறியாமையினாலேயே தோலைப் பற்றிய 'ரிங்வோம்' என்னும் தேமல் நோயைச் சம்பாதித்துக்கொண்டேன். அழுக்குத் தேய்த்து நீராடுவதற்கு எங்களுக்குக் கடல்நீர் கிடைத்ததுண்டு. அதில் சவர்க்காரம் (ஸோப்) கரைவதில்லை. எனினுஞ் சவர்க்காரம் உபயோகிப்பது நாகரிகத்தின் ஓர் அறிகுறியாகுமென்று நம்பி நான் அதனை உபயோகித்து வந்தேன். இதனால் உடம்பின் புறத்தோல் சுத்தமாகாது, கொழுப்பேறப்பெற்றது. இதனால் சொறி தேமல் உண்டாயிற்று. நான் டாக்டர் மேத்தாவிடம் காட்டினேன். அவர் 'அஸெடிக் ஆஸிட்' என்னும் 'காடி திராவக'த்தை உபயோகிக்கச் சொன்னார். அதனால் எரிவு உண்டாயிற்றென்றும் நான் அழுதேன் என்றும் நினைவு வருகிறது. டாக்டர் மேத்தா என் அறையைப் பரிசோதித்துப் பார்த்தார். அதன் வசதிகளையும் நோக்கினார். அவை தன் அங்கீகாரம் பெறவில்லை யென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார். "இந்த இடம் போதாது. நாம் சீமைக்கு வருவது எதற்காக? படிப்பிற்காக மாத்திரமல்ல. ஆங்கிலேயரது வாழ்க்கை முறைகளையும் வழக்க ஒழுக்கங்களையும் அநுபவ வாயிலாகக் கண்டறிவது கல்வியினும் சிறந்த பயிற்சியன்றோ? இதற்கு நீ ஒரு குடும்பத்தோடு வதிவதே தக்க உபாயமாகும். ஆனால் நீ அவ்வாறு செய்வதற்கு முன், கொஞ்சகாலம் பழகிக்கொள்ள ஒருப்படுவது நலமாகும். அத்தகைய ஓர் இடத்திற்கு நான் உன்னை அழைத்துச் செல்வேன்" என்று டாக்டர் மேத்தா சொன்னார்.

### உணவு விஷயம்.

நான் நன்றி யறிவோடு, இக் குறிப்பை ஒப்புக்கொண்டேன். நண்பர் ஜாகையில் குடி புகுந்தேன். அவர் அதிக அன்போடு என்னைக் கவனிக்கலானார். அவர் என்னைத் தன் சகோதரனாகவே நடத்தி வந்தார். ஆங்கிலேயரது பழக்க வழக்கங்களின் மர்மங்களை எனக்கு உபதேசிக்கலானார். ஆங்கில மொழியில் உரையாடவும் பழக்கப்படுத்தினார். ஆனால் உணவு விஷயம் எனக்கு ஒரு பெரும் பிரசினையாகி யிருந்தது. உப்பாவது காரசாரமாவது கலவாமல் சமைத்த காய்கறி வகைகள் எனக்குச் சுவைதரவில்லை. எனக்காக எவ்வாறு சமையல் செய்யவேண்டுமென்பது வீட்டெசமானிக்குவிளங்கவில்லை. 'ஓட்' அரிசிக்கஞ்சியே எங்கள் காலை போசனம். அப்போது நான் ஏறக்குறைய வயிறு நிறைய அதனைப் பருகுவதுண்டு. ஆனால் எப்போதும் போசன வேளையிலும் சிற்றுண்டி வேளையிலும் எனக்குப் பட்டினிதான். ஊனுணவுகொள்ள வேண்டுமென்று நண்பர் வற்புறுத்திய வண்ணமாகவே யிருந்தார். நானோ என் வாக்குறுதியினை எப்போதும் எடுத்துக் காட்டி மௌனம் சாதித்து விடுவதுண்டு. போசன வேளையிலும் சிற்றுண்டி வேளையிலும் எங்களுக்கு ரொட்டி, பசலை (தோட்டத்தில் விளையும் ஒருவகையான உணவு பொருள்) பழமுரப்பா (ஜாம்) என்பன விளம்பப்பெற்றோம். நான் நன்றாகச்சாப்பிடக்கூடியவன்; உண்டி சுருக்கும் வழக்கமில்லை. ஆனால் இரண்டு மூன்று துண்டு ரொட்டிகளுக்குமேல் வேண்டுமென்று கேட்பதற்கு வெட்கமா யிருந்தது. அப்படிக் கேட்டுச் சாப்பிடுவது சரியாகத் தோன்றவில்லை. இன்னும் ஒரு குறையிருந்தது. அதாவது சிற்றுண்டி வேளையிலும் போசன வேளையிலும் பால் கிடையாது. இத்தகைய நிலைமையைக் கண்டு என் நண்பர் வெறுப்புற்றவராய்ப் பின் வருமாறு பேசினார்:—"நீ என் சொந்தத் தம்பியாக இருந்தால் உன்னை உடனே தூக்கி ஊருக்கு அனுப்பியிருப்பேன். கல்வி மணம் வீசப்பெறாத தாயின் முன் செய்யப்பெற்ற வாக்குறுதியால் என்ன பயன்? இங்கேயிருக்கும்நிலைமையினை நீ அறியாத காலத்தில் செய்ததன்றோ அது! அதுவும் ஓர் வாக்குறுதி யாகுமோ? சட்டப்படி அது செல்லத்தக்கதோர் வாக்குறுதியல்ல. அத்தகைய வாக்குறுதியைப் பற்றி நிற்பது சுத்த மூட நம்பிக்கையே யாகும். இப் பிடிவாதத்தால் இங்கே உனக்கு ஒருவித ஆதாயமும் கிடையாது. ஏற்கெனவே மாமிசம் சாப்பிட்டதாகவும் அது சுவையுடையதாயிருந்ததாகவும் நீ ஒப்புக்கொள்கிறாய். முற்றிலும் அநாவசியமானபோது அதனைப் புசித்தாய்; அது இன்றியமையாததென்றறிந்தும் இங்கே சாப்பிடமாட்டாய். அந்தோ! பரிதாபம்!" என்றார். இச் சொற்பொழிவிற்கு நான் வைரமலை போல அசையாது நின்றேன்.

### திருவருளே துணைசெய்தது.

ஒவ்வொரு நாளும் நண்பர் வாதஞ் செய்வது வழக்கம். என்றும் என் விடையோ எதிர்மறை விடையே யாகும். அவர் எவ்வளவுக் கெவ்வளவு வாதித்தாரோ, அவ்வளவுக் கவ்வளவு என் பிடிவாதமும் அதிகரித்தது. நாடோறும் நான் இறைவனது இன்னருள் நாடினேன். நாடிய நல்லருள் நாடிய வண்ணமே கைகூடலாயிற்று. கடவுளைப்பற்றி எனக்கென ஓர் கருத்துமில்லாத காலம். எனினும் நம்பிக்கை நன்கு வேலை செய்தது. என் சிறந்த தோழியும் செவிலித் தாயுமா யிருந்த ரம்பா விதைத்த விதையே இப்போது எனது நம்பிக்கை மதமாக விளைந்தது.

### 'என் கட்டுரை இழக்கிலேன்'

ஒருநாள் நண்பர் 'பெந்தாம்' என்பார் இயற்றிய 'பயனைப் பற்றிய பரிசீலனை' என்னும் நூலை எனக்கு வாசிக்கத்தொடங்கினார். அது என் அறிவைக்கடந்த விஷயமா யிருந்தது. நூலின் நடை மிடுக்குவாய்ந்தாய், எனக்கு விளங்காததாயிருந்தது. அவர் அதற்கு விரிவுரை நிகழ்த்தலுற்றார். நான் பின் வருமாறு விடையளித்தேன்:—"தயவு செய்து என்னை மன்னிக்க வேண்டுகிறேன். இத்தகைய நுட்பமான பொருள்கள் எனக்கு எட்டுவ தில்லை. ஊனுணவு கொள்வது அவசியமென்பதை அங்கீகரிக்கிறேன். ஆனால் என் வாக்குறுதியை உடைத்தெறிய மாட்டேன். அதைப்பற்றி என்னால் வாதஞ்செய்ய முடியாது. என்னால் எதிர்வாதஞ் செய்து தங்களை வெல்ல முடியாதென்பது நிச்சயம். தயவுசெய்து என்னை மூட்டா ளென்றாவது, பிடிவாதக்காரனென்றாவது தள்ளிவிடுங்கள்! தாங்கள் என்பால் கொண்ட நேசத்தைப் பாராட்டுகிறேன். தாங்கள் எனது நலம் கருதுவதும்தெரியும். எனக்காகப்பரிவு கொண்டன்றோ, தாங்கள் மீண்டும் இவ் விஷயத்தில் எனக்கு இடித்துக் கூறுகிறீர்கள் என்பதும் தெரியும். ஆனால் யான் என்ன செய்வேன்? வாக்குறுதி வாக்குறுதி யன்றோ? அதனை யறுத்தெறிவதும் உண்டோ?"

### நண்பரது கவலை.

நண்பர் ஆச்சரியத்தோடு என்னை நோக்கினார். புத்தகத்தை மூடிவிட்டு, "சரிதான். நான் இனி விவகாரஞ்செய்வதில்லை" என்றார். நான் மகிழ்ச்சியுற்றேன். அவர் மீண்டும் அப்பொருள்பற்றி வாதித்ததே யில்லை. எனினும் அவருக்கு என்னைப்பற்றிய கவலை ஓயவில்லை; அவர் புகைச்சுருட்டும் மதுவும் உபயோகித்து வந்தார். ஆனால் நானும் அவ்வாறு செய்ய வேண்டுமென்று அவர் வேண்டினாரில்லை. உண்மையில், அவ்விரு பழக்கங்களிலும் நான் கலந்துகொள்ளாம லிருக்கவேண்டுமென்றே வற்புறுத்தினார். இறைச்சியின்றி நான் இளைத்துப் போவேன் என்பதும் அதனால் சீமையில் எனக்குச் சுகவாழ்வு இல்லாமற் போய்விடும் என்பதுமே அவர் கொண்ட கவலையாகும். இவ்விதமாக ஆங்கில நாகரிகப் பயிற்சிக் குரிய காலத்தில் ஒருமாதம் கழிந்தது. நண்பர் வீடு 'ரிச்மாண்டு' என்னுமிடத்திலிருந்தது. அங்கிருந்து வாரம் ஒரு முறை இருமுறைதான் லண்டனுக்குப் போக முடியும். ஆகவே நான் ஒரு குடும்பத்தோடு வசித்தல் வேண்டுமென்று டாக்டர் மேத்தாவும் திரு தலபத்ராம் சுக்லாவும் தீர்மானித்தார்கள்.

### குடும்பப் பழக்கம்.

மேல—கென்ஸிங்டன் என்னும் பகுதியில் ஒரு ஆங்கிலோ-இந்தியன் (இந்தி

யாவில் பழகிய ஆங்கிலேயன்) வீட்டிலே என்னை அமரச்செய்ய வேண்டுமென்று திரு சுக்லா தீர்மானித்தார். வீட்டுக்காரி ஒரு விதவை. என் வாக்குறுதியைப் பற்றி அவளுக்குச் சொன்னேன். என்னைச் சரியாகப் பார்த்துக் கொள்வதாய் அக்கிழவி வாக்களித்தாள். நான் அவளது இல்லத்தில் வதியலானேன். அங்குங்கூட எனக்கு அனேகமாகப் பட்டினிதான். மிட்டாய் முதலான தின்பண்டங்கள் அனுப்பும்படி வீட்டிற்கு எழுதியிருந்தேன். ஆனால் ஒன்றும் வந்து சேர்ந்ததாக வில்லை. எல்லாம் சுவையற்றதாகவே யிருந்தது. எனக்கு உணவு உருசியாயிருக்கிறதா?—என்று நாடோறும் கிழவி கேட்பாள். அவள் என் செய்வாள்? எனக்குக் கொடுக்கப்பெற்ற உண்டிக்குமேல் வேண்டுமென்று கேட்க, என் மனம் துணியவில்லை; வழக்கம்போல் கூச்சம் கொண்டவனாகவே யிருந்தேன். அவ் அம்மையாருக்கு இருபுதல்வியருண்டு. அப்பெண்மணிகள் பிரியமாய், எனக்கு இரண்டொரு துண்டு ரொட்டிகள் அதிகமாகப் பரிமாறுவதுண்டு. ஆனால் என் வயிற்றை நிரப்புவதற்கு முழு ரொட்டியும் வேண்டியிருக்குமென்பதை அன்னார் சிறிதும் அறியார்.

**பத்திரிகைகளும் சுத்த போசனமும்.**

எனினும் நான் இப்போது இஷ்டப்படி பறந்து திரியலானேன். ஒழுங்கான படிப்பு இன்னும் எனக்கு ஆரம்பிக்கவில்லை. திரு சுக்லாவின் புகுதி மதிக்கிணங்கி, சமாசாரப் பத்திரிகைகள் படிக்கத் தொடங்கினேன். இந்தியாவில் நான் பத்திரிகையொன்றும் படித்ததே யில்லை. இங்கோ அவற்றை ஒழுங்காகப் படித்து வந்ததால், பத்திரிகை [illegible] ஒரு விருப்பம் விளைந்து [illegible]. 'டெயிலி நியூஸ்' (தினவர்த்தமானி), 'டெயிலி டெலிகிராப்' [illegible] 'மெஜட்'—இவற்றை எப்[illegible] விரைவாகக் கண்ணுறுவதுண்டு. இது ஒருமணி நேரத்திற்குள் முடிந்துவிடும். ஆகவே நான் வெளியே சென்று சுற்றிவரலானேன். சுத்தபோசன சாலை(அதாவது ஊனுணவு விற்கப்பெறாத இடம்) ஒன்றைத் தேடித் திரிவதுமுண்டு. நகரத்தில் அத்தகைய சாலைகள் உளவென்று அம்மையார் (மகாத்மா தங்கியிருந்த வீட்டெசமானி) சொல்லக் கேட்டிருந்தேன். ஒவ்வொரு நாளும் பத்துப் பன்னிரண்டு மைல் தூரம் விரைந்து சுற்றி வருவதுண்டு. சிற்றுண்டிகள் சாசமாக விற்கப்பெறும் இடங்களில் நுழைந்து வயிறார ரொட்டி உண்பேன்; உண்டும் திருப்தி பெறாது திரும்புவேன். இவ்வண்ணம் அலைந்து திரிந்து வருகையில், பாரிங்டன் தெருவிலே ஒரு சுத்தபோசன சாலையை ஒருநாள் தற்செயலாகக் கண்டுபிடித்தேன். அதனைக் கண்ணுற்றதும், தான் மனமுவந்து ஆசைப்பட்டதோர் அருமைப் பண்டத்தைப் பெற்ற குழந்தைபோல உணர்ச்சி மிகுந்து உவகை எய்தினேன். உள்ளே புகுமுன், கதவண்டை ஓர் கண்ணாடி ஜன்னலின் கீழ் விற்கப்பெறும் என்று விளம்பரம் செய்யப்பெற்றிருந்த புத்தகங்களைப் பார்த்தேன். சுத்த உணவு இன்றியமையாததென்பதை வற்புறுத்தி ஸால்ட் என்பார் எழுதிய நூலொன்றும் அப்புத்தகங்களுக் கிடையே காணப்பட்டது. விலை ஒரே ஷில்லிங். அதனை வாங்கினேன்; போசன அறைக்கு நேரே சென்றேன். ஆங்கில நாட்டில் அடிவைத்த பிறகு, உள்ளக் கிளர்ச்சியோடு நான் திருப்தியாகச் சாப்பிட்ட முதற் சாப்பாடு இதுவே யாகும். இங்ஙனம் இறைவன் என்பால் அருள் சுரந்து துணை செய்வாராயினர்.

**சைவ சுத்த உணவிலே உள்ளம் ஈடுபட்டது.**

ஸால்ட் துரை எழுதிய புத்தகத்தை அடி முதல் முடிவுகாறும் ஆராய்ந்தேன். விஷயங்கள் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்தன. அந்நூலினை ஆராய்ந்த நாள் தொடங்கி, பெரு விருப்பத்தோடே சைவ சுத்த உணவில் என் உள்ளம் ஈடுபட்டது. இதனை எடுத்துரைக்கலாகும். என் அன்னையார் திருமுன்னர் உறுதி கூறி வாக்களித்த நாளை நன்னாளெனக் கொண்டாடினேன். வாய்மை காக்கவும் வாக்குறுதி காக்கவுமே அன்று காறும் ஊனுணவினை விலக்கி யிருந்தேன். எனினும் அதே சமயத்தில் ஒவ்வொரு இந்தியனும் ஊனுணவு கொள்ள வேண்டுமென்று விரும்பினேன். கட்டுத்தடையின்றி, தாராளமாக நானும் ஊனுணவு கொள்ளத்தக்க ஒரு நற்காலம் பிறக்கும் என்று எதிர்பார்த்தேன். இத்தகைய கட்சிக்கு ஆள் சேர்க்க வேண்டுமென்பதும் எனது நோக்கமாயிருந்தது. இப்பொழுதோ, இத்தகைய நோக்கங்க ளெல்லாம் அடியோடே மாறிப்போயின. சுத்த உணவே சுகவாழ்விற்கு இன்றியமையாததெனக்கண்டதும், இனி இக் கொள்கையினைப் பரப்புவது என் பெரு நோக்கங்களில் ஒன்றாகி விட்டது.

---

## எங் இந்தியா குறிப்புக்கள்.

### வாழ்க ஆனினம்!

உயர்ந்த சாதிப் பசுக்களைப் பாலால் அறியலாம். கன்றுக்குட்டிகளை நன்றாக வளர்த்தல் வேண்டும். சுத்தமான பசும்புல் வனமே கன்றுக்குட்டி தோன்றுவதற்குத் தக்க தலமாகும். இது கிடையாதாயின் அதிசுத்தமாகப் பாதுகாக்கப் பெறும் மாட்டுக் கொட்டிலும் கொள்ளத்தக்கதே. பிறந்த வுடனேயே கன்றுகளைப் பாதுகாத்தல் நன்று. சரியான போஷணை பெறாத கன்று நல்ல பசுவாக வளர்வதில்லை. ஆனால் அஜீர்ணத்திற்கு இடம் கொடுப்பது நன்றன்று. தாய்ப் பசு ஆரோக்கியம் வாய்ந்ததாக இருந்தால், முதல் நாலு நாள்களுக்கு, கன்றைப் பசுவுடன் விட்டு வைப்பது நலமே யாகும். அப்போது கன்றுக்கு அடிக்கடி பால் பருகவேண்டிய அவசியமுண்டு. இது தாய்ப் பசுவுக்கும் நன்மை தருவதாகும். மேலும் முதல் ஐந்து நாள்களில் நாம் பாலை உபயோகிப்பது நமக்கு நன்மை தருவதுமன்று. தாயிடமிருந்து பிரிக்கப் பெற்ற கன்று உலர்ந்த—சுத்தமான—சூரிய வெளிச்சமுள்ள கொட்டிலில் விடப்பெறவேண்டும். கன்றுகளின் போஷணை ஒழுங்காக [illegible] வேண்டும். மேய்ச்சல் [illegible] ஏராளமான புல்லும் [illegible] இருத்தல் வேண்டும். [illegible] நாலு நாள்கள் ஆனதும் நீரும் [illegible] கன்றுகளுக்கு அளிக்க வேண்டும். சரியானபடி பால் ஊட்டும்போது [illegible] கன்றுகளுக்கு நீர் இன்றியமையாததாகும்.

(ஓர் அமெரிக்க நிபுணர் நூலிலிருந்து தொடுக்கப் பெற்றது.)

### ஆந்திரூசின் [illegible]

ஆந்திரூஸ் துரை தென் ஆப்பிரிக்காவிலிருந்து மகாத்மாவுக்கு ஒரு நிருபம் வரைந்துள்ளார். அது [illegible] இந்தியர்க்காக அப்பெருமகன் தென் ஆப்பிரிக்காவில் படும்பாடுகளை ஒருவாறு வெளிபடுகின்றது. பொன்னினும் மிக்க 'ப்ளாடினம்' அதிகமாக [illegible] ட்ரான்ஸ்வாலில் நிலக்கரி சுரங்கம் பிடிக்கப் பெற்றிருப்பதாலும் [illegible]லும் தென் ஆப்பிரிக்கா செழிப்புறப் போவதாக ஆந்திரூஸ் துரை கருதுகின்றார். இதனால் அங்குக் கூலியாள்கள் தேவை என்பதை ஆப்பிரிக்காவாசிகளான ஐரோப்பியர் உணர்கின்றனராம். இந் நிலைமையில் ஆயிரக்கணக்கான உழைப்பாளிகளை நாட்டைவிட்டுத் துரத்த முயல்வது மூகத்தை அவமதிக்க மூக்கை யறுப்பது போலாகும் என்பதைப் பலரும் அறிகின்றார். இத்தகைய தன்னல உணர்ச்சியினாலும், தாகூரைக் குறித்தும் [illegible] சாற்பொழிவினாலும் நிலைமை மாறுதல் அடையக்கூடும் என்று ஆந்திரூஸ் துரை நம்பி யிருந்தார். இந்த நம்பிக்கை வீணாகிவிட்டதே என்று ஆந்திரூஸ் கவன்று அரசாங்கத்தின் தீர்மானத்தை எதிர்நோக்குகின்றார். நீதி முறையினாலே [illegible] சிறப்பதாகக் கருதப்பெறும் ஆங்கிலவ[illegible]ன் அடிப்படை இவ்விஷயத்தில் [illegible]ப்பட்டுள்ளதென்றும், எனினும் [illegible] மேல் கிடைக்கும் பலன் [illegible]யே யென்றும் ஆந்திரூஸ் கூறி முடிக்கின்றார். ஆனால் வீரத்தோடு சத்தியாக்கிரகம் செய்தால் உண்மைக்கு வெற்றி நிச்சயமென்று மகாத்மா கூறுகின்றார்.

### பஞ்சமர் பரி[illegible]

திருச்சானூர் ஆலயப் பிரவேசத்திற்காகத் தண்டனையுற்ற முருகேசன் (பஞ்சமன்) அப்பீலில் விடுதலை பெற்றதைக் குறித்து எழுதுகையில் மகாத்மா 'ஜட்ஜ்மெண்டி'ன் குறைகளை ஆராய்கின்றார். இந்து சமயத்தினராகிய எதிரி நன்னோக்கத்தோடு தரிசனஞ் செய்யச் செல்வது இந்து சமயத்தை அவமதிப்பதாகாது என்று ஓர் இந்து நீதிபதி தீர்மானியாதது விந்தையே. பஞ்சமன் ஆலயத்துள் அடிவைப்பது வழக்கவிரோதமாயிருக்கலாம்; அது சரியன்றென்று சில இந்துக்கள் கருதலாம். ஆனால் அது மதத்தை அவமதிக்கும் குற்றமாகுமா? அவனைப் புலையன் என்று ஒருவரும் அறியக் கூடவில்லை. அவனது உடை சமய சின்னங்களெல்லாம் சரியாகவே யிருந்தன. இத்தகைய மக்களை இம்சிப்போரே இந்து மதத்தை அவமதிப்பவராவர் என்று மகாத்மா கூறுகின்றார்.



## ராமனுதபுரம் ஜில்லாபோர்டு.

மார்ச்சு மாதத்திய கூட்டம் ௧௩-ந் தேதி மாலை ௫-மணிக்கு மதுரையிலுள்ள பழைய ராமனுதபுரம் கலெக்டர் ஆபீஸ் கட்டிடத்தில் போர்டின் கௌரவ அக்கிராஸனர் கனம் ராமனுதபுரம் ராஜா அக்கிராஸனத்தின்கீழ் கூடியது.

### வைகையாற்றுக்குப் பாலம்,

மானுமதுரையில் வைகையாற்றுக்கு பாலம் கட்டும்பொருட்டு ஜில்லா போர்டின் ரயில்வே வரிப்பணத்திலிருந்து ரூ. ௬௪000 தற்கால சாந்தியாக எடுத்துக் கொள்ளலாமென அநுமதித்து ஒரு தீர்மானம் செய்யப்பட்டது.

### ராமனுதபுரம் திருப்புல்லாணி டிராம்வே

ராமனுதபுரத்துக்கும் திருப்புல்லாணிக்கும் டிராம்வேஏற்படுத்தி அதை நடத்தி வரும்படி ராமனுதபுரம் ஜில்லா போர்டுக்கு அனுமதியளித்து வெளியிட்ட சர்க்கார் உத்திரவு ரிக்கார்டு செய்யப்பட்டது. மேற்படி டிராம்வே போடுவதற்கு எஸ்டிமேட்டு கூடிய சீக்கிரம்தயாரிக்கப்பட வேண்டுமெனத்தீர்மானிக்கப்பட்டது.

### தேவகோட்டையில் வீட்டுவரி.

தேவகோட்டை யூனியன் போர்டில் வீட்டுவரிஉயர்த்தப்படவேண்டிய விஷயம் பின்பு ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. தேவகோட்டை யூனியனில் போதுமான பணமில்லையென்றும், அதற்குக் காரணம் தேவகோட்டையில் வீட்டுவரி வாடகை மதிப்பின்மீது நூற்றுக்கு மூன்று வீதம் வரி விதிக்கப்படுவதே யென்றும் ஆகவே வாடகை மதிப்பில் நூற்றுக்கு ஏழரை வீதமாக வீட்டுவரி உயர்த்தப்பட வேண்டுமென்றும் அக்கிராசனர் தெரிவித்தார். தேவகோட்டை யூனியனில் ௬0000ஜனத்தொகை.தற்சமயம் வீட்டு வாடகை மதிப்பின்மேல் நூற்றுக்கு மூன்றுவீதம் வீட்டுவரி விதிக்கப்படுகிறது. வீட்டுவரி ரூபாய் ௧௪000 வரை பிரதி வருஷமும் வசூலாகிறது. தேவகோட்டை யூனியனின் இவ்வருஷத்திய வரவு செலவு திட்டத்தில் மொத்தவருமானம் சுமார்ரூபா௩ ௨,000 எதிர் பார்ப்பதாகவும் அதில் சுமார் ரூபா ௨௨000 செலவழிக்கப் போவதாகவும் கண்டிருக்கிறது. தேவகோட்டையில் நல்ல ஜலசப்ளை வேலைகள் ஏற்பாடாகி வருகின்றன. அதற்கு மொத்தச் செலவு ௩௬0000 ரூபாயில் பாதி ரூபாய் ௧௮0000 தனவைசியர்களாலும் மற்றொரு பாதி ரூபாய் ௧௮0000 சர்க்காராலும் அளிக்கப்பட்டிருக்கிறது. மேற்படி வேலை முடிய இன்னும் சுமார் மூன்றுவருஷங்களாகுமென எதிர் பார்க்கப்படுகிறது. தேவகோட்டையில் தற்சமயம் ௪00 மின்சார விளக்குகளும் ௩௭ சாதாரண கிரோசின் விளக்குகளும் ரஸ்தாக்களில் போடப்பட்டிருக்கின்றன. இது போதாது என்றும், தற்சமயம் தேவகோட்டையிலிருக்கும் ௩௨ குப்பை வண்டிகள் போதாவென்றும் ரஸ்தாக்கள் அதிகசீர்திருத்தமடைய வேண்டியிருக்கிறதென்றும், அதற்கெல்லாம் பணம் அவசியம் என்றும் கனம் ராமனுதபுரம் ராஜா தெரிவித்தார். வெகுநேர ஆலோசனைக்குப் பின் வீட்டுவாடகை மதிப்பின்மீது நூற்றுக்கு நாலரைவீதம் வீட்டுவரி உயர்த்தப்பட வேண்டுமென்றும் அப்படி உயர்த்தினால் ரூபாய் ௨௧000வீட்டு வரியில் கிடைக்குமென்றும் மிஸ்டர் டி. வி. ஸ்ரீனிவாசய்யங்கார் ஒரு தீர்மானங் கொண்டுவர அது ஏகமனதாய் நிறைவேறியது.

### மோட்டார் லைசென்ஸ்.

ராமனுதபுரம் ஜில்லாபோர்டு ரஸ்தாக்களில் வாடகைக்கு விடப்படும் மோட்டார் வண்டிகளுக்கு ஜில்லா போர்டுக்கு வருடமொன்றுக்கு அவைகள் ஏற்றிச் செல்லக்கூடிய சீட் ஒன்றுக்கு ரூபாய் ௨0 வீதமும் ௬ மாதத்துக்கு ௧௨-௮-0 ரூபாய் வீதமும் லைசென்ஸ் பணம் கட்ட வேணுமாய் சென்றகூட்டத்தில் செய்யப்பட்டிருந்த தீர்மானம் ஊர்ஜிதப்படுத்தப்பட்டது.

### திருப்பத்தூர் முஜாபர் பங்களா.

திருப்பத்தூரில் ஒரு முஜாபர் பங்களா கட்ட ௧௩0௫0ம், மேற்படி கட்டிடத்திற்கு வேண்டிய இடம் வாங்க ரூபா ௧௪௮-௬-௧ம், மேற்படி முஜார்பா பங்களாவில் ஒரு கிணறு வெட்ட ரூபா ௭00ம், சாங்கிஷன் செய்யப்பட்டது.

### தனுஷ்கோடி ஸ்நாந கட்டம்.

தனுஷ்கோடி ஸ்நான கட்டத்துக்கு தனுஷ்கோடி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து ஒரு ரஸ்தா ஏற்படுத்த ரூபாய் ௯௩-௮-௫ செலவில் ௧ ஏக்கர் ௬௧ செண்டு நிலமும், ரூபாய் ௧௪௫௮-௯-௧ செலவில் ௩0முக்கால் ஏக்கர் நிலமும் விலைக்கு வாங்க வேண்டுமாய் தீர்மானிக்கப்பட்டது.

### டோல்கேட்கேள்.

சென்ற வருடம் ரூபாய் ௩௩௭௧௭0க்கு ஏலத்தில் குத்தகைக்குவிடப்பட்ட ராமனுதபுரம் ஜில்லா போர்டு டோல் கேட்கேள் இவ்வருஷம் ரூபாய் ௩௪௬, ௪௩0க்கு ஏலத்தில் குத்தகைக்கு விடப்பட்டதை ஜில்லாபோர்டார் ஒப்புக் கொள்ளுவதாக ஒரு தீர்மானஞ் செய்யப்பட்டது.

### மரணக் கணக்கு.

இவ்வருஷம் ஜனவரி மாதம் ராமனுதபுரம் ஜில்லாவில் ௧௩௭ பேர்கள் காலராவினாலும், ௩0 பேர்கள் அம்மையினாலும், ௯௧ பேர்கள் பிளேக்கினாலும் மாண்டதாக வாலான கணக்கு ரிக்கார்டு செய்யப்பட்டது.

### ரஸ்தாக்கள்.

ராமனுதபுரம் ஜில்லாவில் எந்தெந்த ரஸ்தாவை சர்க்கார் பரிபாலிக்கவேண்டுமென்றும் எந்தெந்த ரஸ்தாவை எந்தெந்த தாலூகா போர்டார் பரிபாலிக்க வேண்டுமென்றும், ராமனுதபுரம் ஜில்லா போர்டார் எந்தெந்த ரஸ்தாக்களைப் பரிபாலிக்க வேண்டுமென்றும் ரஸ்தா பிரிவினை செய்யும் கமிட்டியார் செய்திருக்கும் தீர்மானத்தை ஒப்புக்கொள்ளுவதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

## குன்றக்குடி.

இவ்வூரில் நாளிது மீ ௩0௨ நடைபெற்ற வீரமாகாளியம்மன் பொங்கலை முன்னிட்டு, ௨௮, ௨௯, ௩0-ம் தெய்தி ஆகிய மூன்று நாட்களிலும் மாலையில் திருவாளர்களான ஆவி. லெ. அருணசலச்செட்டியார், சொ. முருகப்பசெட்டியார், அரு. சோமசுந்தரச் செட்டியார் ஆகிய மூவரும் ஜீவகாருண்யப் பிரசங்கத்தின் பயனாகப் பலர் ஆடு கோழி யறுத்தலை நிறுத்திப் பாற் பொங்கலிட்டார்கள்.

---

## செய்தித் திரட்டு.

இரங்கூன் நகரத்திற்குப் பக்கத்தில் ஒரு தீவிபத்தால் பார்னெட்ப்ரதர்ஸின் மானேஜிங் டிரக்டர் வசித்துவந்த மாளிகை, சாமான்கள் நகைவகைகளோடு, நெருப்புக் கிரையாகிவிட்டன. நஷ்டம் ரூபா எ௫000 என்று மதிப்பிடப் படுகிறது.

* * *

டில்லியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் காரியக்கமிட்டியார் ௧௯௨௬ல் தேர்தலை முன்னிட்டு ஒரு பிரசாரக் கமிட்டி நியமித்துள்ளார். திருமதி சரோஜினி நாயுடு, பண்டிதநேரு, லாலா லஜபதிராய், திரு எஸ். ஸ்ரீநிவாசய்யங்கார், மௌலானா ஷவுகத்அலி, திரு கோஸ்வாமி, டாக்டர் சையது மகமது ஆகியவர் பிரசாரக் கமிட்டியின் உறுப்பினராவர். அன்னிய நாடுகளில் பிரசாரம் புரிவதைக் கவனிப்பதற்காக, பண்டித நேரு, லாலாஜீ, வைத்திய மணி அன்சாரி ஆகிய மூவரும் நியமிக்கப் பெற்றுள்ளார்.

* * *

ஒரேகோத்திரத்தைச்சேர்ந்தவர்களுக்குள் விவாக சம்பந்தம் ஏற்பட்டால் அது சட்டப்படி செல்லுமா, அந்த விவாகத்தின் பலனாக உண்டாகும் சந்ததிக்கு எல்லா பாத்யங்களும் உண்டா—என்ற பிரச்னை பஞ்சாப்பில் அ வருஷ காலமாக ஒரு ஜில்லாக்கோர்ட்டில் விவாதிக்கப்பட்டு செல்லுபடிதான் என்று தீர்ப்பாயிருக்கிறது. ஐகோர்ட்டுக்கு இன்னும் அப்பீல் செய்யப்படவில்லை. அப்பீலில் இத்தீர்ப்பு உறுதியானால், இந்தியாவிலுள்ள எல்லா கோர்ட்டுகளுக்கும் சௌகரியமா யிருக்குமென்றும் ஹிந்து லாப்படி இப்போது ஸகோத்ர விவாஹம் செல்லுபடி யாகாதென்றும், "ஸோஷல் ரிபார்மர்" பத்திரிகை எழுதுகின்றது.



நாளென் செயும்! வினைதா னென் செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற் றென் செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி.
குரோதன ௵ பங்குனி மீ சஅ.

## ஹிந்துமக்கள் வாழ்வு.

உலகில் பிறந்து வாழ்கின்ற மக்கள் காலத்திற் கேற்பத் தங்கள் வாழ்க்கை முறைகளை ஆராய்ந்து சீர்ப்படுத்திக் கொண்டுவர வேண்டியது இன்றி யமையாததாகும். ஒருகாலத்திற் போடப்படும் திட்டமானது எக்காலத்திற்கும் பொருத்தமாக இருக்குமென்று நினைப்பது அறியாமையேயாகும். தினந்தோறும் புதிது புதிதான மக்கள் பிறந்துகொண்டே யிருக்கின்றனர். உலகப் பொருள்கள் யாவும் தினந்தோறும் மாற்ற மடைந்துகொண்டே இருக்கின்றன. எனவே மனிதரது வாழ்க்கையின் போக்கும் ஒரு அளவுக் குட்பட்டே நிகழ்வதில்லை. திட்டம் போட்டு வரம்பு கட்டிய நூல்கட் கேற்ப எந்த நாட்டிலும் மனிதர் சென்றதில்லை. செல்லப் போவதுமில்லை. அது முடியாத காரியம். இயற்கையைக் கட்டுப்படுத்தி நூலெழுதுவதேபெரும் பிழையாகும். காலத்தை பொட்டி மக்களது பலத்தை யறிந்து தேச நிலையை ஆய்ந்து வாழ்க்கை நெறிகளை அறிவாளிகள் வகுக்க முன்வருகின்றனர். எழுதிய காலத்தில் அந் நூல்கள் பெரும்பயனை அளித்திருத்தல் கூடும். ஜனசமூகமானது காலக்கிரமத்தில் வளர்ந்தோ குறைந்தோ பல ஆண்டுகளாக மாறுபட்டுக்கொண்டே வந்திருக்கும்போது பழயகால நூல்களை விரித்துப் புராணம் படித்துக்கொண்டிருப்பதானல் சரியான பயன் கிடைப்பது முடியாத காரியம். பல வருடங்கட்கு முன் எழுதப்பட்ட ஸ்மிருதிகளை அவிழ்த்துக் கதை படிப்பதால் இன்று ஒரு நன்மையும் விளையப்போவதில்லை. இப்போதிருக்கிற கஷ்ட நிலையையும் அதற்கு வேண்டிய திருத்த முறைகளையும் தைரியத்துடனும் ஆழ்ந்த அறிவுடனும் எடுத்துக் கூற முன்வருதல் அவசியமாகும். உலகத்திலுள்ள எல்லா தேசத்தாரும் அறிவு நூலாராய்ச்சியிலும் அரசியற் றுறையிலும் வாணிபத்திலும்கைத்தொழிலிலும்தலைசிறந்து நிற்கும்போது நமது ஹிந்து மக்கள் எல்லாத் துறையிலும் கையற்றுக் காலற்று உடல்வலி யின்றி அறிவுங் குன்றி நடைப்பிண மென்று பிற மதத்தினாாற் கருதப் பட்டுக் கிடக்கின்றனர். மூட வழக்கங்கள் மன்னையைப் பிடித்துக் கண்ணையுங் கெடுத்து உயிரை மாய்க்கின்றன. ஒருவ ரிருவர் தலைதூக்கிக் கண்ணை விழித்தால் பலர் கண்ணீனக்குத்தக் காத்துக் கொண்டிருக்கின்றனர். சடங்குகள் ஒருபுறம் இடுப்பை முறிக்கின்றன. எழுதிக் குவித்திருக்கிற நூல்களில் உண்மை யெது? பொய் யெது? பிரட்டெது? என்று காண்பது எளிதான காரியமாக இருக்கவில்லை. எல்லா நூலும் உண்மை! எழுதிவைத்திருப்பன வெல்லாம் சத்தியம்! நம்பாவிட்டால் நரகம்! என்ற சொற்கள் உருட்டி விழித்த கண்களுடனும், எரிந்து பொரிகிற உள்ளத்துடனும், ஜாதிப்பூசல் சமயப் பகைமை கொண்டு பலர் கூற வெளிவருகின்றன. யார் என்ன சொன்னபோதிலும் ஹிந்து மக்கள் வாழ்வு புத்துயிர் பெற வேண்டுமானல் விரைவில் நல்லமாதிரியான சீர்திருத்த முறை வகுக்கப்பட வேண்டும். இன்றிருக்கிற நிலையில் இன்னும் பன்னுளிருத்தல் முடியாத காரியம். சுருக்கமாகக் கூறினல் தமிழ்நாட்டிலுள்ள ஹிந்து மக்கள் இன்பவாழ்வு வாழ்கின்றனர். இரவு பகலாக ஒவ்வொருவர் ஒவ்வொரு வழியில் கவலைப்பட்டுக் கஷ்டமுற்று நிற்கின்றனர். சைவரும் வைணவரும் வேதாந்திகளும் சமய உயர்வு பேசிக்கொண்டிருக்கலாம். ஆனல் வாழ்க்கை நெறியில்—சடங்குகளில்— விழாக்களில்—பரிகாரங்களில் — பிறவற்றில் எல்லாரும் படும்பாடு கொஞ்சமல்ல. சமூகவாழ்வைத் திருத்துவதால் மதம் அழிந்துபோகுமென்று கருதுவது வீணேயாகும். சமய நெறி (Religion) யையும் லௌகிக வாழ்வையும் (Social) சேர்த்துக் குழப்பியதாலேயே நம்மவரது இல் வாழ்வு எழுந்திருக்க முடியாத சேற்றில் விழுந்து தவிப்பவரின் நிலையை ஒத்திருக்கிறது. மனிதனுடைய வாழ்க்கை முற்றும் புன்பட்டு இன்பமிழந்து வாடிப் போய்விட்டது. வாட்டத்தைத் தணிப்பதற்கு வழியுகப்பட வில்லை. வயிற்றுப் பிழைப்புக்கு எழுதப்பட்ட சுவடிகளைக் கொண்டு பரிகாரந் தேட முயல்கின்றனர். முடியாது தவிக்கின்றனர்! இந்த உண்மைகள் அறிவுடைய யாவர் மனத்திலும் ஊடுருவிப் பாய்கின்றன. தீவிரமாக அன்னவர் துணிந்து முன்வந்துழைப்பின் பயன் பெறுதல் நிச்சயம்!

## எண்டிசைக் காட்சி.

### புத்தியிருக்கிறது.

பாரிஸாலில் உள்ள டாக்டர் தரிணி சாரண் சாஹூர் என்னும் கனவான் ஒரு லட்சம் ரூபா பெறுமான தமது சொத்துக்களை அவ்வூரில் ஏற்படப் போகும் வைத்திய பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த ஆஸ்பத்திரிக்கு நன்கொடையாக அளித்து ஒரு உயில் எழுதி ரிஜிஸ்டர் செய்திருக்கிறாராம். தேசத்தில் நோய் வாய்ப்பட்டு கிடந்த துன்புறும் மக்களது பரிதாபநிலைக் கிரங்கித் தமது சொத்துக்களை இந்தப் புண்ணிய காரியத்திற்குப் பயன் படுத்தியிருப்பது போற்றத்தக்கதாகும். நமது நாட்டில் இம்மாதிரியான பத்தி சாதாரணமாக வருவதில்லை. பதினுயிரம் ரூபா இருந்தாலும் அதனைக் கொண்டு பிள்ளையை சுவீகாரம் எடுத்து வையுங்களென்று உயிலில் எழுதிவைப்பார்கள். பிள்ளையாண்டான் வந்து வாழவகையின்றிக் குரங்காக விழிப்பான். ஏதாவது தருமஞ் செய்ய முயல்வாகும் உபயோகமற்ற வழியில் பணத்தை வீணுக்குவார்கள். பாரிசால் கனவானைப் பலர் பின்பற்றுவார்களாயின் பயனுண்டு.

### அவர் மனைவி.

கணவன் எவ்வழி சென்றாலும் அவ்வழியே மனைவியும் செல்வாளாகில் வாழ்க்கை இன்பமுடையதாகும். மேற்படி கனவான் ஒரு லட்சம் பெறுமான சொத்தை வைத்தியசாலைக்கு எழுதி வைத்த பொழுதே அவர் மனைவியும் தமக்குரிய சொத்துக்களை எல்லாம் தேசீயப் பணிக்கு உபயோகிக்க வேண்டியதென்று உயிலெழுதி ரிஜிஸ்டர் செய்து விட்டாராம். இதனை நம் நாட்டுப் பெண் மக்கள் அறிவாரோ? நமது பெண் மக்களிடம் ஏராளமான பணமிருக்கின்றது. சாமியார்களின் சவக்குழிகட்கும் மடங்கட்கும் அனுவசியமான இடங்களில் கிடக்கும் உபயோகமற்ற குட்டைகட்குச் சுற்றுப் படிகள் கட்டவும் பிறவீண் காரியங்கட்கும் செலவாகின்றன. மக்கட்கு உபயோகப்படும் வழியில் செலவாவதில்லை. காரணமென்ன? கண் மூடப்பட்டிருப்பதேயாகுமன்றோ?

### ஒரு அறிவாளியின் — — — — அபிப்பிராயம்.

காலஞ்சென்ற ராமகிருஷ்ண கோபால பந்தார்கர் ஒரு பெரிய அறிவாளி. சிறந்த படிப்பாளி. அவர் தமது மகளுக்கு விதவா விவாகம் செய்துள்ளார். "ஜாதி வித்தியாசம் இந்தியாவிற்கு ஒரு நன்மையும் செய்யவில்லை. அதற்கெதிரிடையாக அது மிகவும் கெடுதலைச் செய்திருக்கிறது. பிராணி வதை வேதத்தின் சம்மதமா யிருந்தது. புத்தமதமும் ஜைன மதமுமே பிராணி வதையை நிறுத்தின" என்பது பந்தார்கரின் அபிப்பிராயமாகும். இக்கூற்று ஒவ்வொருவரும் ஆராயத்தக்கதாகும்.

### விதவா விவாகம்.

லாகூரில் விதவா விவாகச் சங்கம் நல்ல வேலை செய்திருக்கிறது. இச்சங்கம் முதலில் சர். கங்காராமால் ஆரம்பிக்கப்பட்டதென்றறிகிறோம். கசுகஅ-ம் வருஷ முதல் கஅ வரை முறையே ௩௨, கூ௩, ௩௦, ௬௦, ௬௦, விவாகங்கள் நடைபெற்றிருக்கின்றன. ௧௯௨௦-ம் வருஷத்தில் ௨௨௦ம், ௧௪, ௨௨ல் ௩௧௫, ௬௨ல் விவாகங்கள் நடைபெற்றன. ௧௯௨௪ல் ௬௫௦ம், ௬௧௪ல் ௬௧௯ ம் விதவா விவாகங்களும் நடைபெற்றிருக்கின்றன. பலமான வேலைகள் அங்கு செய்யப்பட்டதன் பயனக இவ்வளவு வெற்றி கிடைத்திருக்கிறது. பணக்காரரும் அறிவாளிகளும், பட்டதாரிகளும் இவ் வியக்கத்திற்குப் பேருதவி புரிகின்றனர். நமது பகுதியிலும் பல பால்ய விதவைகளிருக்கின்றனர். பிள்ளைகளின் நன்மையை ஒரு சிறிதுங் கவனியாமல் பச்சைக் குழந்தைகட்கு விவாகஞ் செய்துவிட்டுத் தலைவிதி யென்று கூறி வீடுகளில் உயிருடன் புதைத்து வைக்கிற வழக்கம் சகிக்கக்கூடியதன்று. இளம் பெண்களைத் துன்புறுத்தி அடைத்து வைத்துவிட்டுத் தாயும் தகப்பனும் இன்பவாழ்வு வாழநினைக்கும் கொடுமை பொறுக்க முடியாததாகும். இப் பெண்கட்கு மறுமணம் செய்தால் தாய்தந்தையர் உறவினரின் கௌரவம் போய்விடுமோம்!

### மூன்று பத்திரிகைகள்.

விதவாவிவாகம் சாஸ்திர விரோதமான தல்ல வென்பதையும் அதன் அவசியத்தையும் எடுத்துக் கூறிப் பிரசாரம் செய்வதற்காக ஆங்கிலம் உருது ஹிந்தி ஆகிய மூன்றுமொழிகளிலும் மூன்று மாதப்பத்திரிகைகள்புதிதாகவெளியிடப்படுகின்றன வென் றறிகிறோம். இப்பத்திரிகைகள் தோன்றி யிருப்பதைப்பற்றியும் விதவாவிவாகத்தை ஆதரித்தும், பண்டிதர்களின் பரிதாப நிலைக்கிரங்கியும் 'சுதேசமித்திரன்' ஒரு குறிப்பெழுதி யிருக்கின்றது. அறிவற்ற தாய்தந்தையரால் அன்பப் படுகுழியில் தள்ளப்பட்டிருக்கும் பால்மணம் மாறு இளங் குழந்தைகட்கு உதவிபுரிய வேண்டுவது மனிதர்களின் கடன் அன்றோ? விதவாவிவாகப் பிரசாரப்பத்திரிகைகள் நீடூழிவாழ்க!

### அரசரின் சாதாரணத் — — — — தன்மை.

இங்கிலாந்தில் சில தினங்கட்கு முன்னர் அரசர் ஒரு பந்தயத்திற்குப் போயிருந்தபொழுது கூட்டம் அதிகமாயிருந்ததாம். அரசர் வண்டியை விட்டு இறங்கிக் கூட்டத்திற் கலந்து நடந்து போனாராம். அரசர் செல்வதற்காக ஜனங்களை அதிகாரிகள் விலக்கும்போது ஒரு போலீஸ்காரன் சாதாரண மனிதனைப்போல நடந்து சென்றுகொண்டிருந்த அரசரையே முரட்டுத்தனமாக விலக்குமுயன்றனும். இங்கிலாந்தில் அரசரே இவ்வாறு சாதாரண மனிதரைப் போலச் செல்கிறர். இந்தியாவில் நூறு ஐம்பது சம்பளம் வாங்குகிற உத்தியோகஸ்தர்கள் படுத்துகிற பாடு கொஞ்சமல்ல. பெரிய செல்வர்களும் சில சில்லரை அதிகாரிகளை "எஜமான்" "எஜமான்" என்று கூறுவதும், அதைக் கேட்டு அந்த எஜமானர்கள் கண்தலை தெரியாமல் விழிப்பதும் சாதாரணமாகிவிட்டன. பொதுஜனங்கட்கு அரசியலறிவு குன்றியிருப்பதே இதற்குக் காரணமாகும்.

## உள்ளூர்ச் செய்தி.

சங்கீத சபை:— இச்சபையின் ஆதரவில் பல்லடம் சஞ்சீவி ராவ் புள்ளாங்குழல் கச்சேரி இனிது நடைபெற்றது.

சுவாமி புறப்பாடு:—ஸ்ரீமாந் நா. வ. மெய்யப்ப செட்டியாரவர்கள் ஷஷ்டியப்த பூர்த்தியை முன்னிட்டு உகஉ யன்றிரவு சிவன்கோவிலிலும் கஒஉ இரவு அம்மன் கோவிலிலும் வெகு விமரிசையாக சுவாமி யெழுந்தருளச் செய்யப்பட்டது. உகஉ மாசிவராத்திரி யாகும். அன்றிரவு சிவன்கோவிலில் தேவடியாள் ஆட்டம் பலமாக நடைபெற்றது குறிப்பிடத்தக்கதாகும். மகாசிவராத்திரிக்குவிழித்திருந்த சுவாமி தரிசனம் செய்ய முன்வந்தவர்கட்கு இரண்டு தரிசனமுங் கிடைத்தன.

ஊழியன் அவதூறு வழக்கு:—இவ் வழக்கு இராமநாதபுரம் சப்டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட்முன் மார்ச்சு மதி கஅ-உ எடுத்துக் கொள்ளப்பட்டது. இராமநாதபுரம் நீதி மன்றத்திலின்றும் வேறு மன்றத்திற்கு மாற்ற வேண்டுமென்று சென்னை உயர்தர நீதி மன்றத்தில் வாதி மனுவொன்று கொடுத்திருந்தார். அதன் மேல் இராமநாதபுரம் சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட்டுக்கு ஒரு தடை உத்தரவு வந்திருந்தது. வாயிதா தினத்தில் வாதிவக்கீல் பிளேக் நோயை முன்னிட்டு மாற்ற வேண்டுமென்றே ஹைகோர்ட்டில் விண்ணப்பம் செய்து தடை உத்தரவு பெற்றதாகவும் இப்போது பிளேக் இல்லாததால் மனுவை வாபீஸ் வாங்கும் எற்பாடு நடை பெறுவதாகவும் ஆகவே இன்னெரு வாயிதா வேண்டுமென்றும் கோர்ட்டாரைக் கேட்டுக்கொண்டார். வாதி ஹைகோர்ட்டில் கொடுத்த மனு தள்ளப்பட்டதென்று தந்திச் செய்தி வாதிக்குக் கிடைத்ததென்றும் வாயிதா கொடுக்கக்கூடா தென்றும் எதிரி வக்கீல் வாதித்தார். அவ் விஷயத்தைப்பற்றிய தகவலொன்றும் தமக்குக் கிடைக்கவில்லை என்று கூறி எற்கெனவே கொடுத்துள்ள தடை உத்தரவுக்கிணங்க இராமநாதபுரத்திலேயே ஏப்ரல் கஅ உ வாயிதா குறிப்பிட்டிருக்கிறார்கள்.

## தந்தி செய்தி.

சைகோன், பங்குனிமீ ௬௨

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | நூற்று ஐம்பத்தேழு. |
| சிங்கப்பூர் வட்டம் | இரண்டு. |

பினங்கு, பங்குனிமீ ௬௨

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | நூற்று ஐம்பத்து நான்கு. |
| ஈயம் விலை | நூற்று நாற்பத்துமூன்று. |
| ரப்பர் விலை | நூற்று முப்பத்து இரண்டு. |

யூனியன் போர்டு மீட்டிங்:—இன்று பிற்பகல் ௩-௩௦ மணிக்கு மீட்டிங் ஆரம்பமாகிறது. பிரஸிடெண்டுவராததால் ஸ்ரீமான் சு, ராம. அரு. அருணசலச் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். கழனிவாசல் சிவன்செயல் ரோட்டிலிருந்து சேர்வைகாரர் ஊரணி மயானத்திற்கு ஒரு ரோட்போடவேண்டுமென்று வந்த மகஜரின் பேரில் இரு அங்கத்தினரின் பார்வைக்கு விடப்பட்டது. புதூரில் புதிதாகக் கட்டப்பட்டிருக்கிற டிராமா கொட்டகை லைசென்ஸ் அப்பீல் அடுத்த மீட்டிங்குக்குத் தள்ளி வைக்கப்பட்டது. பழைய சந்தைக்குத் தெற்கிலுள்ள ஆண்டிகள் புதைகுழியையும், செஞ்சை ஊரணி தண்ணீர்ப்புரளி தென்புறத்திலுள்ள பறையர் புதைகுழியையும் அப்புறப் படுத்துதற்கு வேண்டிய ஏற்பாட்டை பிரஸிடெண்டு செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டது. மற்றும் சில எங்குரோச்சுமெண்டுகளுக்கு நோட்டீஸ் கொடுக்கும்படி தீர்மான மாயிற்று.

---

கோ. லேக்ஷ்மிவரம்

## ஸ்ரீ மீநாக்ஷி சங்கம்.

நாளிது மாசித் திங்கள் ௨௮-ம் நாள் மாலை நான்கு மணிக்கு இவ்வூர் மடத்தில் கொத்தமங்கலம் திருவாளர் ஸ்ரீ. கோ. ராமபத்திர சர்மா அவர்கள் "சிவன்ராத்திரி விரதத்தின் மஹிமை"யைப்பற்றி மேற்கோள்களுடன் இரண்டு மணி நேரம் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். பின்பு வந்தனோபசாரம் கூறப்பட்டு திரு சர்மா அவர்கட்கு மாலை போட்டு சந்தன தாம்பூலம் வழங்கப்பட்டு ௬-௩௦ மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி செ. அருணசலம் செட்டியார் அறிவிக்கிறார்.

---

## குன்றக்குடி.

பங்குனி உத்திரம்:—௩௨ வெள்ளிக்கிழமை காப்புக்கட்டப் பெறும். மேலவையாபுரியில் தண்ணீர் கிடையாது. தெற்குவையாபுரியிலும் வடக்குவையாபுரியிலும் மிகச் சொற்பத் தண்ணீரே உண்டு. வேறு நீர் நிலைகள் இல்லை. மலைச்சுனைகள் சிலவற்றில் புழுமயமாகக் கொஞ்சங் கொஞ்சங் கிடக்கின்றன. இரண்டு மூன்று தினத்திற்குள் மழையில்லாவிட்டால் பங்குனி உத்திர விழா பெருங் கஷ்டமாக முடியும்.

போலீஸ்:—இவ்வூரைக் காரைக்குடிப் போலீஸ் எல்லைக்குள் சேர்த்துவிட்டபடியால் இங்கிருந்த ஸ்டேஷன் கிழச்சிவற்பட்டிக்கு மாற்றப்பட்டுவிட்டது.

நிருபர்.

---

## இளைஞர் சங்கம், கண்டனூர்.

இச்சங்கச் சார்பில் நிகழும் ஆண்டு மாசித்திங்கள் இருபத்தேழாம் நாள் புதன்கிழமை மாலை ௬ மணிக்கு சிவன் கோயில் ஊருணி மேல்கரையில் ஒரு கூட்டம் கூடியது. அவ்வமயம் காரைக்குடி திருவாளர் சேவ.மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். திரு. சுதி. பழநியப்ப செட்டியாரவர்களால் "நாடகம்" என்றவிடயமும் திரு. ஜி. கணபதி அய்யரவர்களால் "மானஸபூஜை" என்றவிடயமும், ஆ. தெற்கூர் சுப. சோமசுந்தரம் செட்டியாரவர்களால் 'கதர்' என்றவிடயமும் பேசப்பட்டன. தலைவரவர்கள் முடிவுரை கூற திரு. சுதி. பழநியப்ப செட்டியாரவர்களால் வந்தனோபசாரம் கூறப்பெற்று இராத்திரி ௯ மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது என காரியதரிசி ந. வீரப்பன் எழுதுகிறார்.

---

## ஊர் வம்பு.

### சட்டசபைத் துறவு.

டில்லி சட்டசபையிலிருந்துமனைய மாகாண சட்டசபைகளி லிருந்தும், சுயராஜ்ய கட்சியினர் அச்சபைகளைத் துறந்து வெளியேறி யுள்ளார். இதனால் சீர்திருத்த அரசியல் வெளிப்பட்ட கள்வனைப் போல விழிக்கின்றது. சுயேச்சைக் கட்சியினரும் துரைதாசர்களான பொம்மைப் பிரதிநிதிகளும் இன்னும் இச்சபைகளைச் சிக்கெனப் பிடித்து நிற்பது ஒரு வேடிக்கையாகவே யிருக்கிறது.

### ஏன் இந்த மதிமயக்கம்.

ஜின்னா-ரங்காசாரி திருக்கூட்டத்தார் இன்னும் அதிகார வர்க்கத்தின் மாயாவிலாச மோகவலையில் மயங்கி நிற்கின்றார். மேலும் சீர்திருத்தம் வழங்க வேண்டுமா? என்புதை ஆராய, ஓர் ராயல் கமிஷன் வேண்டுமென்று, இராசபக்தர் கூட்டம் அடிமேல் முடிசாய்த்து வாய் விட்டாற்றுகின்றது. எனினும் அதிகாரச் சிறுதெய்வங்கள் இரங்கவில்லை. முடியவே முடியாது என்று மறுத்துவிட்டன. இன்னும் தெளிவில்லாத இராசபக்தர்கள் சட்டசபைகளையே தழுவி நிற்கின்றார். இவர்களது பக்திப் பெருக்காதலின் மர்மம்தான் என்ன?

### புதிய அரசப் பிரதிநிதியின் உண்மை மொழி.

இந்தியாவின் புதிய அரசப்பிரதிநிதி லார்ட் இர்வின் தம்உயர்தர பதவியை ஏற்றுக் கொள்ளு முன்னரே இந்திய பிரிட்டிஷ் ஆட்சியின் தத்துவத்தை இனிது விளக்கி யுள்ளார். இந்தியரின் நன்மைக்காக இங்கிலீஷ்காரர் இந்தியாவை ஆளுவதாகக் கூறப்படுகின்றது. ஆனால் இது முற்றிலும் உண்மையல்ல என்று புதிய வைசிராய் கூறியுள்ள உண்மை மொழி பொன்னெழுத்துக்களில் பொறிக்கத்தக்கன. பிரிட்டிஷ் தொழிலாளர் பிழைப்பிற்காகவே அன்னிய ராட்சிநிலையிடப் பெற்றுளது இந்தியாவின் மூலப்பொருள்கள் ஏற்றுமதி செய்யப் பெறுவிட்டால், ஆங்கில நாட்டுத் தொழிலாளர்களின் வயிற்றுப் பிழைப்புக்கு வழியில்லை.

### ஆங்கில அதிகாரிகளும் வர்த்தகரும்.

நிர்வாக சபைக்குரிய பிரயாணச்செலவைக் கொடுக்க முடியாதென்று ஜனாப் ஜின்னா டில்லி சட்டசபையில் சொன்னார் வர்த்தக மந்திரி 'ஐரோப்பிய வியாபாரிகளே! நீங்களே! சாட்சி' யென்றார். நல்லசாட்சிதான். நிர்வாகசபை உறுப்பினர் சுற்றுப் பிரயாணம் செய்வதால், அவர்களுக்கும் ஐரோப்பிய வர்த்தகர்களுக்கும் பரஸ்பர பலன் உண்டென்பதில் ஐயமுமுண்டோ? ஆனால் இந்திய வியாபாரிகளோ 'நன்மை வெள்ளையர்களுக்கு. தடையும் அசௌகரியமும் தங்களுக்கே' என்று புலம்புகிறார்களல்லவா?

### புதிய இந்தூர் மகாராஜா.

அரசப் பிரதிநிதியின் திருமுகம் கொணர்ந்த தூதர் புதிய இந்தூர் அரசருக்கு ஜார்ஜ்சக்கரவர்த்திபெயராலும் அரசப் பிரதிநிதி பெயராலும் ஆசிமொழிந்தார். மகாராஜா (அதாவது சிற்றரசர் எனபது பொருள்) ஆங்கில வல்லரசோடு ஒன்றி நின்று 'ஆங்கில' சக்கரவர்த்தி பால் பக்தி விசுவாசம், கொண்டு இராஜ்ய பாரம் செய்வாரென்று நம்புகிறேன். மகாராஜா பட்டம் ஒரு பெருஞ் சுமை. ஆனால் அறிவும் உறுதியும் பண்பும் வாய்ந்தவிடத்து, எச்சுவலையும் எளிதில் விலகும். இத்தகைய ஓர் சிற்றரசனைப் பார்க்கிலும் இந்திய மக்களுக்கு நன்மை பயக்க வல்லவர் இந்தியாவில் வேறே எவருமில்லை" என்றார். எவ்வளவு இராஜ தந்திரம்! என்ன புத்திமதி!—இவ் ஆசிமொழிகளில் பொதிந்துள்ளன! பாருங்கள். புதிய அரசருக்குத் தமது தந்தையாரின் தலைவிதி நினைவிற்கு வந்திருக்க வேண்டும்.

---

## சந்தோஷச் செய்தி.

நாட்டுக்கோட்டையார் பலர் சேர்ந்த நமது கம்பெனியின் தொழிற்சாலை யொன்று பெங்களூரில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற சந்தோஷச்செய்தியை சனதனவான்கள் கேட்டு மகிழ்ச்சி யடைவார்களென்பது திண்ணம்.

பல வருஷங்கள் அனுபோகமுள்ள திறமையான சாய வேலைகாரர்களைக் கொண்டு கெட்டிச்சாயம் போட்டு நல்ல முறுக்குப்பட்டினால் தயாரித்த பலவித புதுப் புது மாதிரியான ௪௦, ௧௧, ௧௨ முழக் கண்டாங்கிகளும் ௧௬, ௧௮ முழச் சேலைகளும் ௫௦ ரூ. முதல் ௫௦௦ ரூ. வரை உயர்ந்த ஜரிகை தினுசுகளும் மிகுந்த சகாய விலைக்குக் கொடுக்கப்படுகின்றன.

ஏராளமான தறிகள் நெய்து வருவதால் எல்லா விதமான ஜவுளி தினுசுகளும் குறித்த காலத்திற்குள் மலிவான விலைக்குத் தயாரித்துக் கொடுக்கத் தகுந்த வசதிகள் உண்டு.

விலாசம்,
மைசூர் ஜவுளி வர்த்தகசாலை,
௧௦௨ அவினியூ ரோட்,
பெங்களூர் சிட்டி.

குறிப்பு:—செட்டிமார் நாட்டில் நேரில் பாாக்க விரும்புவோர், கோனாபட்டு எங்கள் ஹெட் ஆபீஸில் நேரில் பார்த்து வாங்கிக் கொள்ளலாம்



## சில குறிப்புக்கள்.

ஸ்ரீமாந் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் கதரபிவிருத்தி கள்ளாமை என்ற இரண்டு விஷயங்களைப் பற்றி நல்ல பிரசாரஞ் செய்து வருகிறார். அவர் ஆங்காங்கு செய்திருக்கிற உபந்யாசங்களி லிருந்து சில குறிப்புக்களை இங்கு எடுத்துக்காட்ட விரும்புகிறோம்.

* * *

நல்லெண்ணெயை நெய் யென்று விற்பது போலவும் சர்க்கரையில் மண்ணைக் கலப்பது போலவும் போலிக் கதர் வியாபாரம் நடைபெற்று வருகிறது. இப்படி விற்பது பாவமாகும் என்று கூறுகிறார். நாட்டில் போலிக்கதர் மலிந்து வருவது உண்மையேயாகும். இதற்கு முக்கிய காரணம் விலை சல்லிசாக இருப்பதேயாகும். உண்மைக் கதர் நீண்டநாள் உழைக்குமென்று அவர் கூறுகிறார்.

* * *

பசி என்பது ஏழைகட்குத்தான் தெரியும். பணக்காரருக்குத் தெரியாது. நம் நாட்டில் ஒருவேளைக் கஞ்சிக்குக்கூட வழியின்றி எவ்வளவு பேரோ தவிக்கின்றனர்! சேலம் பக்கங்களில் ராட்டினத்தின் உதவியினால் வாரத்திற்கு எட்டணா சம்பாதித்துத் திருப்தியடைந்தார்கள். சென்ற வருடத்தில் எங்களூரில் எட்டு லட்சம் ரூபாய்க்குக் கதர் விற்றிருக்கிறோம். இப்போது இரண்டாயிரம் ராட்டினங்கள் சுழலுகின்றன" இப்படிப் பேசியிருக்கிறார். ஆனால் இந்த இரண்டாயிரம் ராட்டினங்களையும் ஓய்வின்றிச் சுழற்றி வருமாறு செய்ய வேண்டிய பொறுப்பு யாருடையதென்று எண்ணிப் பார்க்க வேண்டும். புதிதாக ஆங்காங்கு ராட்டினஞ் சுழற்றுமாறு செய்ய வேண்டியது ஒவ்வொருக்குங் கடமையாயினும் இப்போது நடைபெறுந் தொழிலுக்கு உயிர்கொடுத்து அதனைச் சாவாமல் காப்பாற்ற வேண்டுவது முக்கியமன்றோ?

* * *

ஸ்ரீமாந் ஆச்சாரியார், எல்லாரும் கதரை அணிந்தால்தான் இந்த ராட்டினத் தொழிலாளரின் நிலைமை பாதிக்கப்படாதிருக்கு மென்று கூறுகிறார். கதர்ச் சரக்கு விற்பனை யாகாமற் கிடக்குமானால் ராட்டினம் என் செயும்? ஆதலால் யாவரும் கதர் கட்டும்படி செய்ய வேண்டுவது அவசியமாகின்றது. கதராடை கட்டுவது ஒரு கஷ்டமான காரியமன்று. தேசத்திற்காக இந்தச் சிறு உதவிகூடச் செய்யாமல் வேறென்னதான் செய்ய விருக்கிறது? இத்தொழில் விருத்தி செய்வதால் பல்லாயிரக் கணக்கான ஏழை மக்கள் கஞ்சி குடித்து வயிறு வளர்க்கக் கூடுமாதலால் அநேகம் தரும சத்திரங் கட்டிவைத்த பலனைக் கதரணிபவர் பெறுகிறார்களென்று ஆச்சாரியார் கூறுவது கவனிக்கத்தக்கதாகும்.

* * *

நூல் மில்களில் கழிவு விழுந்த பஞ்சுகள், முன்னர் மெஷின் துடைக்கவும் லெட்டுகள் துடைக்கவும் உபயோகிக்கப்பட்டன வென்றும், அவைகளைக் கொண்டு இப்போது போலிக்கதர் தயாரிக்கப் படுகிறதென்றும், சத்தில்லாத கழிபட்ட அப்பஞ்சுகளால் தயாரிக்கப்படும் போலிக் கதர் வேட்டிகள் கஜம் நாலணாவுக்கு மேல் அடங்காதென்றும் விரைவில் அது கிழிந்தழிந்து போகுமென்றும் அன்பர் ராமநாதன் கூறுகிறார். உண்மையான கதர் எப்படியும் கஜம் பத்தணாவுக்குக் குறையக் கிடைப்பது கஷ்டமென்றும் அவர் தெரிவிக்கிறார். இவற்றை அன்பர்கள் உணர்வார்களாக. என்ன புரட்டு செய்தாவது தங்கட்கு லாபம் கிடைக்க வேண்டு மென்று கருதிய மில் ஆசாமிகள் கதரியக்கத்திற் கிடுக்கண் உண்டாக்கி வருகிறார்கள். ஜனங்கள் விலை சகாயத்தை நாடுகின்றனர். கதர் விரைவாகக் கிழிந்து போகிறதென்ற ஒரு கெட்ட பெயரையும் சூட்டுகின்றனர். கதராடையுடுப்போர் கவனித்துப் பார்த்து வாங்குதல் வேண்டும்.

* * *

துணி முரடாயிருக்கிறதென்று சிலர் கூறுகின்றனர். நம்மிடத்தில் கலந்து பழகுகிற பல முரட்டுச் சாமான்களை வீட்டுவிடுகிறோமா? நைசாக இருக்கிற சாமான்களைத் தவிர வேறொன்றை நாம் தொடுவதில்லையா? அபிமான முண்டாகிவிட்டால் முரடென்ற எண்ணமே உண்டாவதில்லை. உண்டானாலும் தேசாபிமானத்தில் அது மறைந்து போகின்றது. தவிர இப்போது நைசான கதர் வேட்டிகள் ஏராளமாகக் கிடைக்கின்றன. அவற்றை வாங்கி உபயோகிக்கலாம். முரடாயிருந்தாலும் மெல்லிதாக இருந்தாலும் கதர் வேட்டி வாங்கும்போது கவனித்து வாங்குதல் வேண்டும்.

* * *

ஜனங்களை யேமாற்றிப் பணம் பறிப்பதென்றே வியாபாரிகள் ஆரம்பித்துவிட்டனர். ஜனங்களைப் பற்றியாவது தேசத்தைப் பற்றியாவது இவர்கள் எண்ணுவதாக இல்லை. போலிக்கதர் விற்கும் பாவிகளாலேயே கதரியக்கம் நம்பிக்கையற்று வருகிறது. கதராடை கட்ட விரும்புவோர் போலிக் கதர்க் குழியில் விழுவதும் பரிதாபமே யாகும். விலை சகாயத்தைக் கருதியே அதனைப் பெற்றுக் கொள்கின்றனர். இப்படிச் செய்வது 'காசிக்குப் போயும் கருமந் தொலையவில்லை' என்ற பழமொழி போன்றதாகும். எந்தஇயக்கத்திலும் உணர்வும் தியாகமும் இல்லாவிட்டால் மேன்மை யடைய முடிகிறதில்லை.

---

### கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டத்தாருக்கு ஓர் வேண்டுகோள்.

அன்பிற் சிறந்த நண்பர்காள்! நமது திருக்கூட்டத்தின் சார்பில் சுமார் இரண்டு வருடமாக, ஜீவகாருண்யப் பிரசாரம் நடைபெற்று வந்தது. இவ்வருடம் கொலைப்பொங்கலாகிய பங்குனிப் பொங்கலோ நெருங்கி வந்துவிட்டது. காரைச் சிவனடியார் திருக்கூட்டத்தாரும், பிரசாரத்துக்கு ஆகவேண்டிய முயற்சிகள் செய்து வருவார்களென்று நினைக்கிறேன். சென்ற வருடத்தைப் போல், இவ்வருடமும் இரண்டு திருக்கூட்டத்தாருமே சேர்ந்து, மும்முரமாகப் பிரசாரம் செய்து, இவ்வருடத்தோடு பலி என்பதே இனி நடைபெறுதிருக்குமாறு செய்துவிடுவார்களென்று நம்புகிறேன். புதுக்கோட்டை அரசாங்கத்தார் சட்டசபையில், ஆலயங்களில் இனிமேல் பலிப்பொங்கல் வைக்கப்படாதென்று தீர்மானமும் செய்துள்ளார்கள். அதனைக் கூடிய சீக்கிரம் அமுலுக்குக் கொண்டுவருவார்களென்றால், திருக்கூட்டத்தார்களின் கொலைமறுத்தல், பிரசாரத்தை ஒருவாறு நிறுத்திப் போட்டு, வேறுவித பிரசாரங்கள் செய்யலாம். இவ்வருடமும் பிரசாரத்திற்காக, (காரியதரிசி) ஸ்ரீமாந் வயி. ராம. இராமசாமி செட்டியாரவர்களின் நன்முயற்சியால், இராட்டின நூல் உற்பத்திசாலை உபதலைவர் திருவாளர் தியாகராஜசிவம், அவர்களால் புதிய பிரசுரங்கள் தயாரித்து அச்சில் இருப்பதாய்க் கேள்விப்பட்டு மிக மகிழ்வுற்றனம். ஆகவே, நமது திருக்கூட்டத்து அங்கத்தினர்களும், காரைச் சிவனடியார் திருக்கூட்டத்தாரோடு சேர்ந்து சொன்னையூர், நேமிப்பட்டி இரண்டு ஊரையும் சேர்ந்த சுற்று ஊர்களில் பிரசாரத்தினைப் பலமாய் நடத்தி, வெற்றிபெற்று வருமாறு எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாராக! சென்ற ஆண்டைப் போல நம்மூரில், பூசாவும் பாற்பொங்கலாகவே வைக்கச் செய்து, அபிஷேகத்திற்கும், பொருள் வசூலித்து, சொன்னையூர் சென்று ஸ்ரீ முத்துமாரி அம்பிகைக்குச்சிறப்பாக அபிஷேக ஆராதனை செய்வார்களென்று நினைக்கிறேன், மு. அ. பி. அடைக்கப்பசெட்டியார்,




## நாகமணி.

(குட்டிக்கதை.)

முருகவேள் எழுதியது.

ஓர் அந்திப் பொழுதில் திருச்செந்திற் கடற்கரையில் மந்தமாயும் அடுக்கடுக்காயும் வரும் சடலாசியின் அலைக்கைகளது அழகைப் பார்த்துக்கொண்டே, ஆநந்தகரமான பல இன்பப் பேச்சுகளுக்கிடையில் அலைவாயண்ணல் ஆலயத்தினின்றும் அதிக தூரம் வந்துவிட்டோம். ஆகவே இனி வந்தவழியாகவே திரும்புவதென்றால் இன்னும் வெகு நாழிகை ஆய்விடும் என்றெண்ணி நண்பர்களுடன் குறுக்குவழியாகப் பனந்தோப்பைத் தாண்டிப் போவதுஎன்று நிர்மானித்துத் திரும்பினோம். ஓர் ஒற்றையடிப்பாதையும் இருந்தது. அதற்குச் சற்று தூரத்தில் வலைஞர்களது இருப்பிடம், மிக அடர்த்தியான குத்துச்செடிகள், சிறிதும் பெரிதுமான பல மணற்குன்றுகள் இருந்தன. மெல்லிய நீல வானத்தில் அப்பொழுதுதான் உடுக்கணங்கள் சிறிது சிறிதாகச் சிதறிச் சிதறித் தோன்றிக்கொண்டிருக்கின்றன. ஒற்றையடிப் பாதையில் பத்தடிதான் சென்றிருப்போம்; எனக்குப் பின்னால் வந்த கண்ணன் என்னை மட்டும் கையைப் பிடித்து நிறுத்திக்கொண்டு "நில், முருகேசா" என்று வாயில் கைவைத்துச் சத்தம் செய்யாதிருக்கும்படி செய்து அங்கிருந்த ஒரு பனைமரப் பொந்தைச் சுட்டிக் காட்டினான், ஆ, என்ன ஆச்சரியம்! அதனுள் நெருப்புக்குஞ்சு போன்று ஒரு பொருள் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

"கண்ணா! நாகமணி என்று நம்முடைய ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகிற பாம்பு-முத்தல்லவா கிடந்து மின்னுகிறது! இன்று நமக்கு நல்லகாலந்தான், இனி நம்மைப்போல், பாக்கியசாலி இப்பூவுலகில்லை. இன்று யாருடைய முகத்தில் விழித்தோமோ? தெரியவில்லை. நீ சத்தம் செய்யாதிருக்கும்படி முன் எச்சரித்ததற்கு மிக்க நன்றி பாராட்டுகிறேன். ஒருவேளை பாம்பு அருகிலேயே இரை எடுத்துக்கொண்டு இருந்தாலும் இருக்கலாம். கைலாசத்தை மிக்க தந்திரமாக வீட்டிற்கு அனுப்பி விடுகிறேன். இன்றேல் நம்முடைய அதிர்ஷ்டத்திலல்லவா கைவைப்பான்." என்று கூறிவிட்டு எங்கட்கு முந்திச் சென்ற கைலாசத்தை நாடிச் சென்றேன்.

நாங்களும் பின்னாலேயே வருவதாக நினைத்து அவன் போய்க்கொண்டேயிருந்தான்; எங்கட்குக் கால் அதிகம் நோவதால் சிறிது தங்கி வருகிறோம் என்று மிக்க தந்திரமாய் இன்னும் பல காரணங்கள் காட்டி அவனை முன்னால் அனுப்பிவிட்டேன். முதலில் சந்தோசக் குறியுடன் போக மனமில்லாதிருந்தாலும் நான் பலவகையாகக் கூறியதின் பிறகு மெதுவாக வீட்டிற்குப் போவான் போற் காணப்பட்டான். அவன் சிறிது தூரம் சென்றவுடன் யானும் எனது அதிர்ஷ்ட பொக்கிஷம் கண்ட விடத்திற்குத் திரும்பும்பொழுதே "செந்திலாண்டவன் ஒரு நிமிஷத்தில் எவ்வளவு பெரிய நலனையும் புகழையும் தனத்தையும் சனத்தையும் நமக்கு நல்கக் கருணை கூர்ந்திருக்கிறான். இத்தகைய பாக்கியம் யாருக்கேனும் கிடைப்பதென்றால் பூர்வத்தில் பலவிதமான நன்மைகள் புரிந்திருக்க வேண்டுமே! இதுவரை யாருக்கும் இந்தமாதிரிப் பாக்கியம் கிடைத்திருக்க மாட்டாது. கதைகளில் வேண்டுமானால் படித்துக் கேட்டிருக்கலாம் ஆ! என்ன பாக்கியம்! என்ன பாக்கியம்! இனி இந்தப் பாரினில் யானே அதிருஷ்டசாலி! யானே பெருஞ் செல்வன்! ஆனால் கண்ணன்—ஒரு பாகஸ்தனாகி விட்டானே! அவன்தானே முதலில் கண்டவனுமாகிறான். நியாயமாக...... இந்த விஷயங்களுக்கெல்லாம் நியாயம் பார்ப்பதென்றால், இந்தமாதிரி சந்தர்ப்பங்களை ஒருவன் உபயோகித்துக்கொள்ளாவிட்டால்— அவனைப்போல்—பிரகஸ்பதி (நேர்மாறான பொருளில்;—முழுமகன்)— வேறொருவனில்லை. ஆகையால் ஒருவழியாக கண்ணனை துவாரகைக்கே (அதாவது எமலோகத்திற்கே)-ஆம்; அவன் இருப்பிடத்திற்கே அனுப்பி விடுதல்தான் சாலச்சிறந்தது. இக்காலத்தில் உண்மை நெறிபற்றிப் பொருளீட்டுவாரும் உலகில் உளரோ?" என்று இவ்வாறு மனஞ் சென்ற வழியே ஆலோசனை செய்யலானேன்.

அப்பொழுது சந்திரனும் நாகமணியின் ஒளியை எவ்விதத்திலும் மங்கச்செய்ய வேண்டுமெனும் பொறாமைகொண்டோ வேறு என்ன காரணத்தாலோ தன்னுடைய பூரணகலைகளுடன் தன்னொளி அமுதத்தை எங்கும் வாரி வாரி வீசிக்கொண்டெழுந்தான். கண்ணனும் எதையோ உற்றுக் கேட்டுக்கொண்டு நடுங்குவான் போற்காணப்பட்டான். ஆயினும் அவன் முகத்தில் புகைபடர்ந்தாற் போல் தோன்றிய பயக்குறி மனத்தில் படாமல் வெறும் பாசாங்காகவே தோன்றியது. "ஓ! ஓ! நாம் யோசித்தது போல் இவனும் நம்மை ஒழிக்க முயல்கிறான் போலிருக்கிறது. இவன் பேச்சில் மயங்கிவிடக்கூடாது. அவன் போக்குப்படியே விட்டு அவனை ஏமாற்றிவிட வேண்டும்" என்று யான் என்னுள் விழிப்பாயிருந்தேன். "கைலாசத்தை தகுந்த காரணங் கூறி அனுப்பிவிட்டேன்" என்றேன். அவன் "நண்பா! இதோ இது என்ன சத்தம்; கவனித்தாயா? பாம்பு அருகிலேயே இரை எடுத்துக்கொண்டோ, வேறு என்ன செய்துகொண்டோ இருக்கிறதென்று நினைக்கிறேன். இது மிக்க அபாயகரமானவேலை" என்றான். "இது கடற்கரைக் காற்றின் சத்தம். இக் காற்றினால் பனைஓலைகள் ஒன்றுடன் ஒன்று உராய்வதன் ஓசையாயிருக்கலாம். ஒருவேளை பாம்பின் ஓசையாகவேயிருந்தாலும் அது நம்மைக் காண்பதற்கு முன் நாம் மறைந்துவிடுவோம், நீ போய் நாகமணியை எடு; நான் பாம்பு வாராமல் எச்சரிக்கையாகப் பார்த்துக்கொள்கிறேன்" என்றேன். அவன் "பேஷ்! பேஷ்!! யான் போய் எடுக்கவா? நன்றாயிருக்கிறது. நாகரத்தினம் என்பது என்ன? அதனை உடைய பாம்பு எவ்வளவு வலிமை யுடையது? முதலில் விவரங்களை நீ யறிந்திருந்தால் இவ்வளவு சீக்கிரம் இந்தமாதிரி கூறியிருக்கமாட்டாய்" என்றான். வேறு என்னதான் கூறுகிறான்—பார்ப்போமென்று, "ஆ! அப்படியா!! ஏதோ சிறியேன் தெரிந்தும் தெரியாமலும் சொன்ன குற்றங் குறைகளைப் பொறுத்தருளி, வினாக்களுக்குத் தாமே விடைகள் திருவாய் மலர்ந்தருளவேண்டும்" என்று மிக்க விநயபூர்வகமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று சிந்தித்துக் குத்தலாகவும் சினத்துடனும் நவின்றேன். இவ்விதமான வீண் விவகாரத்தில் எங்கே பாம்பு வந்து தனது இரத்தினத்தைக் கொண்டுபோய் விடுகிறதோ என்ற பயம் ஒருபக்கம் என் நெஞ்சில் கடிகாரம் அடிப்பதுபோல அடித்துக்கொண்டேயிருந்தது. கண்ணன் சொல்கிறான் "—என்னப்பனே! சிஷ்யா! அருளிச் செய்கின்றோம்; கேட்பாயாக. நாகத்தில் மிக்க விஷமுள்ளது நல்லதென்பது. எவ்விதமான பாம்புகளிலும் கொடிய விஷத்தைத் தன்னகத்துக் கொண்டிருக்கும் பாம்பிற்கு நல்லபாம்பு என்று ஏன் பெயர் கொடுத்தனர் பெரியோர் என்றால், அது தனக்கொருவர்க்குக் கட்டுப்படுமாம்; தனக்கொருவர் துன்பிழைத்தாலன்றி அல்லது மிக்க கோப மூட்டப்பட்டாலன்றி தானாகப் பிறரைத் தீண்ட முயல்வதில்லையாம். அத்தகைய நாகங்களுள் தலையாயது பார்ப்பனப் பாம்பாம். அது வெகுநாட்கள் ஜீவித்திருந்தால் அதனுடைய விஷமானது திரண்டு உருண்டு அதன் தலையில் உறைகின்றது. வரவர அதன் நீளமும் குறைகின்றது. அப்படியே ஒருசாணளவு குறுகி அதன் தலையில் திரண்டு உருண்ட மாணிக்கமாக ஜ்வலிக்கின்றது. அது பகலில் வெளியில் சஞ்சரியாது, இரவில்தான் அந்த மாணிக்கத்தை—நாகமுத்தைக் கக்கிவிட்டு அமாவாசை முதலிய பூர்ண இருள் நிறைந்த நாட்களாக இருந்தாலும் தன்னுடைய மணியால் ஒளிகொண்டு இரை தேடிக் கொள்ளும் அந்த மணி மனிதர்கள் கண்ணுக்குப் பெரும்பாலும் தட்டுப்படாது. அப்படி யாரேனும் நம்மைப்போற் பாக்கியவான்கள் கண்டால் சிறிது பசுவின் சாணங் கொண்டு வந்து அதனைப் பேசாது மூடிவிட வேண்டும். அதன் ஒளி அத்துடன் சாணிக்குள் புதைந்துவிடும். ஒளி மறைந்து மூன்றேகால் நாழிகைகளுள் அதற்குரிய பாம்பு எங்கிருந்தாலும் வந்து சாணத்தை மூன்று முறை பிரதக்ஷிணம் செய்து உயிர் துறந்துவிடும். உடனே அதனைப் பால்பழம் முதலியவைகளால் (இப்பொழுது மனிதர்கள் ஜீவதசையுள்ளிருக்கும்போது ஒருவித உதவியும் புரியாதிருந்தாலும் இறந்த பின்பு வயிறு மெச்ச, காமதிக்கத் தேசங்கள் போற்றப் பல காரியங்கள் அன்னார் பெயரிட்டுச் செய்கின்றார்களல்லவா.)



(உ-ம் பக்கத் தொடர்ச்சி.)

பிரிந்து காசியாத்திரை செல்லப் பிரயாணமானான். பல விதத்தில் அவள் அவனைத் தடைசெய்தும் அவன் கேட்கவில்லை. தந்திரமாக அவள் அவனைப் போகும்போது புளியமரத்தடியில் தான் கட்டிக்கொடுக்கும் சோற்று மூட்டையை அவிழ்த்துச் சாப்பாடு செய்துகொண்டு இளைப்பாறிப் போகும்படிக்கும் அப்படியே திரும்பும்பொழுது வேப்பமரத்து நிழலில் தங்கியும் வரும்படி வேண்டினள். அக்காலத்தில் புகைவண்டி முதலிய சௌகரியங்களில்லாமல் ஜனங்கள் ரஸ்தாவில்தான் கால்நடையாய்ச் சென்றனரென்பது உங்களுக்குத் தெரிந்த விஷயமே. இப்படி அவள் அவனுக்குச் சொன்னதின் உட்கருத்து நமக்குப் புலப்படும்; அவள் நாயகனை விட்டுப் பிரிய இஷ்டப்படவில்லை. அப்படிப் பிரிந்தாலும் அவன் சீக்கிரம் தன்னிடம் திரும்ப வேணுமென்பது அவள் விருப்பம். அவன் அங்ஙனமேயே சம்மதித்து பிரயாணம் புறப்பட்டு புளியமரத்தடிகளில் தங்கிச் சென்றதினால் தன் தேகத்தில் வியாதி அதிகரித்து பிரயாணம் செய்ய முடியாமல் காசி வேண்டாம், வீடு சென்றால் சுகம் என்று சில தூரம் போனதும் திரும்ப ஆரம்பித்தான். திரும்பும்பொழுது தனது பத்தினி வேண்டுகோளின்படி வேப்ப மரத்தடியில் தங்கிவந்தான். போகும்போது உண்டான வியாதிகளெல்லாம் திரும்பும்பொழுது கொஞ்சம் கொஞ்சமாய் நீங்கி வீடு வருமுன் திடமாய்க் காணப்பட்டான். பின்னர் தன் பத்தினியிடம் விஷயங்களைத் தெரிவிக்கவும் அவளும் அதன் பிறகு தன் அபிப்பிராயத்தையும் தான் ஏன் இவ்விதம் சொன்னாளென்பதையும் தெரிவித்தாள். புருஷன் மகிழ்ச்சியடைந்து பின்னர் அவளுடனே காசியாத்திரை சென்று சுகமடைந்தான். இவ்வித அனுகூலமுள்ள மரத்தை நாம் பிரயாசை எடுத்துப் பயிர் செய்யவேண்டாமா? ஈசுவர சிருஷ்டியில் நமது நாட்டில் தானே இம்மரங்கள் ஏராளமாய் வளர்கின்றன. அவ்விடம் செல்லும் காக்கைகள் வேப்பமரத்திலுள்ள அழகான பொன் மணிபோலுள்ள பழங்களைத் தின்று கொட்டையைத் தாம் சஞ்சரிக்கும் இடங்களில் போட்டுவிடுவதிலிருந்து யாதொரு முயற்சியுமில்லாமல் இம்மரங்கள் முளைத்து வளர்கின்றன. மேலும் மற்றைய மரங்களைப்போலல்லாமல் கோடையிலும் மரம் இலையை உதிர்த்துப் புது இலைகளை ஏராளமாய் உண்டாக்கிக்கொண்டு புஷ்பிக்கின்றது. வருஷ ஆரம்பத்தில், அதாவது சித்திரை வருஷப்பிறப்பன்று இதன் சிறு வெள்ளைப் புஷ்பங்களை ஜனங்கள் பக்குவஞ் செய்து சாப்பிடுவது வழக்கம். வேப்ப எண்ணெய்யையும் சில வியாதிகளுக்கு உபயோகிக்கிறார்கள். பிரசவித்த வீடுகளில் பிரசவ அறையில் இம்மரத்துக் கட்டைகளையும் புண்ணாக்குகளையும் எரித்து அதனால் பிரசவித்த ஸ்திரீ அனுகூலமடைய ஏற்பாடு செய்கிறார்கள். இவ்வித குணம் இதற்கிருந்தும் நமது ஜனங்கள் அதை அனுபவிக்கப் பிரியமில்லாமல் ஏராளமாய் இந்தப் பஞ்சகாலத்தில் பணத்தை வைத்தியர்களுக்குக் கொடுத்து பலவித மருந்துகளை வாங்கிச் சாப்பிடுகிறார்கள். இதெல்லாம் நமக்கு ஈசுவரன் கற்பித்திருக்கும் சௌகரியங்களை அறிந்து கொள்ளாததின் மூடத்தனமே ஒழிய வேறில்லை.




(முருகவேள் எழுதியது.)

ஒருவர்:—இங்கே யாரையப்பா தேடிக்கொண்டிருக்கிறாய்?

மற்றவர்:—ஒரு முழு மடையனைத் தேடிக்கொண்டிருந்தேன்.

ஒருவர்:—அதோ அந்தக் கடையிலிருக்கும் நிலைக்கண்ணாடியைப் பார்; அகப்படுவான்.

* * *

ஒரு பிராமண நண்பரும் மற்றொரு வேளாள சிநேகிதரும் ஒரு ஊருக்கு வழிநடந்தனர். இடையில் முதலில் சந்தித்த ஊரில் ஸ்நானம் செய்யாது சத்திரத்தில் பிராமணர் சாப்பிட்டு வந்துவிட்டார். காரணம் கேட்டதற்கு "மந்திர ஸ்நானம்" செய்துவிட்டதாகப் பதில் உரைத்தார். இரண்டாவது சந்தித்த ஊரில் சத்திரமும் கிடையாது. பிராமணர் வீடுகளுமில்லை. காலமோ இரவு. வேளாளர் சொன்னார்; "நண்பரே மந்திர போஜனம் செய்துவிடலாமே" என்று. பிராமணர் "இவ்வளவு சீக்கிரம் நீவிர் கிளிப்பிள்ளையாக மாறி விடுவீரென்று அப்பொழுது நான் எண்ணவில்லை" என்றார்.

* * *

ஒரு முதலாளி தனது வேலையாளைப்பார்த்து "புத்திகெட்டவனே" என்று திட்டினார். கூடவிருந்த நண்பர். "அது இருந்தல்லவோ கெடுவதற்கு" என்றார். வேலையாள் "அல்ல, அல்ல. பதிலாக அளவுக் கதிகமான உழைப்பைக் கொடுத்து வாங்கிக்கொண்டு விட்டார்கள்" என்றான்.

* * *

மாணிக்கவாசகர் தமக்கு வந்த பத்திரிகைகளைப் பிரித்துப் படித்துக்கொண்டிருந்தார். அவரைப் பார்க்கவந்த பக்தகோடி முதலியார் "பத்திரிகையில் என்னய்யா விசேஷம்? காந்தி சுயராஜ்யம் வாங்கிவிட்டாரா? பத்திரிகை அடிக்கடி படிக்கமுடிவதில்லை. யாதலினால் இந்த விஷயங்களெல்லாம் நமக்குச் சரியாகத் தெரிவதில்லை" என்றார்.

மாணிக்க வாசகர்:—"மகாத்மா காந்தி வாங்கி விட்டார். மற்றவர்கள் தான் இன்னும் வாங்கவில்லை"

பக்த:—"மற்றவர்களென்றால்"

மாணிக்க:—"நாமெல்லோரும்"

பக்த:—'நாமென்றால்யார் கூடவா?'

* * *

ஒரு கிராமப் பள்ளிக்கூடத்திற்கு ஒரு ஜில்லா கல்வியிலாகா கௌரவ அங்கத்தினர் இன்ஸ்பெக்டருடன் பார்வையிட வந்திருந்தார். முதலில் அங்கிருந்த கருப்புப் பலகையி(Black Board)ல் உயிரெழுத்து மெய்யெழுத்து என்று பிரித்து எழுதப்பட்டிருந்தவை கனம் அங்கத்தினர் கண்களுக்குத் தோற்றின. இன்ஸ்பெக்டரைப் பார்த்து கனம் அங்கத்தினர் "இது என்ன ஐயா? உயிரெழுத்தாம். உயிரில்லாத எழுத்தாம். நான் படித்த (திண்ணைப்) பள்ளிக்கூடங்களிலெல்லாம் இந்த மாதிரியில்லை. இப்படித்தானையா, இல்லாததும் பொல்லாததும் சொல்லிக்கொடுத்து பிள்ளைகளை வீணாக இந்த உபாத்தியாயர்கள் கெடுத்து விடுகிறார்கள். இதற்காகத்தான் போலும் மகாத்மாகாந்திகூட பள்ளி பஹிஷ்கார மென்று சொன்னார்" என்று மெதுவாக அருளிச் செய்தார். இன்ஸ்பெக்டர் மரியாதையாக "தயவுசெய்து இங்கே நேரில் ஒன்றும் சொல்லிவிடாதிருக்கும்படி கனம் மெம்பரவர்களைப் பிரார்த்திக்கிறேன்" என்று கேட்டுக்கொண்டார். பின்பு பலவிதமான பரீக்ஷைகள் நடந்தன. கடைசியாக இன்ஸ்பெக்டர் "பிரியமுள்ள பிள்ளைகளே! ஒரு யுக்தியான கணக்கொன்று போடுகிறேன். விரைவாக யார் தகுந்த மறுமொழி கொடுக்கிறார்களோ அவர்களுக்கு கனம் அங்கத்தினர் தகுந்த பரிசளிப்பார்" என்று முகவுரையாகக் கூறிவிட்டு பின்வரும் கேள்வியைக் கேட்டார்.

"ஒரு முழமுள்ள வேட்டிக்கு நான்கு மூலைகள் பத்து முழமுள்ள வேஷ்டிக்கு எத்தனை மூலைகள்?"

வெகு அவசரமாக அங்கிருந்த சட்டாம்பிள்ளை "நாற்பது மூலைகள்" என்று சொல்லிவிட்டான். சிலர் அவனை ஆமோதித்தனர். உபாத்தியாயர் மறுபக்கம் திரும்பிக்கொண்டார். மகா-ள-ள-ஸ்ரீ கனம் அங்கத்தினரவர்கள் "பேஷ், கெட்டிக்காரன் பயித்தினான்கே நாற்பது, அவ்வளவுதானே" என்று பரிசை யளிக்க முயன்றார். என்னால் சிரிப்பை அடக்க முடியவில்லை இந்தியாவின் கல்வியிலாகா இருந்தவாறென்னே? என்று எழுந்து வந்துவிட்டேன். பின்னர் என்ன நடந்ததோ?

## நோட்டீஸ்.

குரோதன-ஞு மாசி-மீ கசு-உ கொண்டு வந்தார் வசம், பள்ளத்தூர் ச. சித. அள. அளகப்ப செட்டியார் ஆர்டருக்கு ரெங்கூனில் கும. சி. நா. அருணசலம் செட்டியாரவர்கள் பணம் கொடுக்கும்படி ரூ ௫உ௫0 க்கு அடியிற்கண்டவரிடம் பலவந்தத்தின் பேரிலும் (unduo Influence) இன் பேரிலும் ஏமாற்றியும் உண்டியல் எழுதி வாங்கப்பட்டிருப்பதில் மேற்படி உண்டியலை யாரும் மேடோவர் வகையரு வாங்கக் கூடாதென்றும் அதற்கு யாதொரு தொகையும் கொடுக்கப்பட மாட்டாதென்றும் இதன் மூலம் அறிவிக்கலாயிற்று.

சு. நா. சித.
சிதம்பரம் செட்டியார்.
காரைக்குடி
குரோதன-ஞு மாசி-மீ கசு-உ

## குமரன்—வாரப்பதிப்பு.

வருஷ சந்தா உள்நாட்டுக்கு ரூ ச-(-
,, வெளிநாடுகட்கு ரூ ௫-0-0
மாதிரிப் பிரதி இனாம்.

## விளம்பர விகிதம்.

மாதம் ஒன்றுக்கு பத்தி ஒன்றுக்கு ரூ உ0-0-0
மாதம் ஒன்றுக்கு பத்தி அரைக்கு ரூ கக-0-0
டிை பத்தி காலுக்கு ரூ சு-0-0
நீண்டகால விளம்பரம் செய்வோர் நேரே ஆபீசுக்கு எழுதவேண்டுகிறோம்.

## குமரன்—மாதப்பதிப்பு.

வருஷ சந்தா உள்நாட்டுக்கு ரூ ௬-0-0
,, வெளிநாடுகட்கு ரூ ௬-அ-0
தனிப்பிரதி ரூ 0-௪-0

மானேஜர்,
குமரன் ஆபீஸ், காரைக்குடி.







டி சா, முருகப்பசெட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி 'குமரன்' அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப் பெற்றது

